# கல்கி

ஜிப்பா...ஸ்லைலா...ஸ்மார்ட்டா...



கசக்கும் இனிப்பு!

KALKI 04.05.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

# ஈஷாவின் அடுத்த தலைவர்?

- சத்குரு ஜக்கி வாசுதேவ் சிறப்புப் பேட்டி

12
வார
தொடர்
சங்கிலிப்
போட்டியும்
உண்டு!

# கல்கி

அடுத்த
வாரம் முதல்...

ஷோபா
சந்திரசேகர்

எழுதும்

# என் செல்ல
# தளபதி!

விறுவிறு விஜய்யின் சுறுசுறு கதை!

# உடையழகு... நடையழகு...

## - ஷிஹான்'ஸ் சாய்ஸ்...



# கலக்கல் கமல்... கங்கிராட்ஸ் த்ரிஷா!

**ஓவியர், சிற்பி, மார்ஷல் ஆர்ட்ஸ் வீரர், சமையற்கலை நிபுணர், நடிகர், டான்ஸர்... என எண்ணற்ற முகங்கள் ஹுசைனிக்கு இருந்தும் பல பேருக்குத் தெரியாத ஓர் உண்மை... ஃபேஷன் மற்றும் மாடலிங் உலகுடன் ஹுசைனிக்கு இருந்துள்ள தொடர்பு...**

''நானே பல ஃபேஷன் ஷோக்களை நடத்தியுள்ளேன். காம்பியராவும் இருந்திருக்கேன். பல வருடங்கள் அழகிப் போட்டிகளில் ஜட்ஜாகக் கேள்விகளைக் கேட்டு, அழகிகளை அவஸ்தை படுத்தியிருக்கேன். அப்போது கேட்ட கேள்விகள் மிகப் பிரபலம்! ஹுசைனி ஜட்ஜ் என்றாலே அழகிகளுக்கு ஜுரம் வந்துவிடும்'' என்கிற ஹுசைனிக்கு ஃபேஷன் மீது ஆர்வம் வந்தது எப்படி?

''சென்னைக்கு வந்த புதிதில் எனக்கு ட்ரஸ் சென்ஸ் சுத்தமா கெடையாது. என் கஸின்தான் என்னை வெளியில அழைச்கட்டுப் போவான். பெரும்பாலும் ஸ்பென்ஸரில் பழியா கிடப்பேன். பாலசந்தரின் 'புன்னகை மன்னனி'ல் நடிச்சேன். பிறகு மெதுவாகப் பிறரை அப்ஸர்வ் செய்து, பல ஃபேஷன் ஸ்டோர்ஸ்களுக்குப் போய், ஸ்டைலைப் பத்தித் தெரிஞ்சுக்கிட்டேன். இன்னிக்கு 'வெல் ட்ரஸ்டு கய்' அப்படின்னு என்னைப் பத்திச் சொல்றாங்க. சந்தோஷம்தான்'' எனக் கூறுகின்ற ஹுசைனி, ஃபேஷன் டிப்ஸ்களையும் தருகிறார்.

''ஆறு மாதங்களுக்கு ஒரு முறை வார்ட்ரோப் மாற்றியே ஆகணும். இது முதல் சம்பளத்தில் வாங்கியது; இது அம்மா கொடுத்தது; இது 'அவ' கிஃப்ட் பண்ணியது... என்கிற செண்டிமென்டெல்லாம் வேலைக்கே ஆவாதுங்க. தூக்கி எறிங்க; தானம் பண்ணுங்க; புதுசா வாங்கி அடுக்குங்க. அடுத்தது ஒரு ஜோடி கார்கோஸ் கண்டிப்பா வாங்கிடுங்க. நான் சென்னையில

டெலண்ட் நகரிலிருக்கும் டூடில் (Dude)தான் வாங்குவேன். நல்ல பிராண்ட். பிறகு 'ராங்க்லர் ஜீன்ஸ்' (Wrangler) மற்றும் ஃபார்மல் ஷர்ட்ஸ், பான்ட் 'ஸ்டிங்க்ஸ்' (stings) வாங்கி அணிந்தால் அதிரடிதான்! உட்லண்ட் ஷூஸ் வார்ட்ரோபில் பக்காவாக இருக்க வேண்டிய ஐட்டம். போட்டுக்கிட்டுப் பின்னுங்க. ஷூவும் பெல்ட்டும் ஒரே கலரில் இருக்கணும். பர்ஃப்யூம் தரமானதாகப் போடணும். நல்லா ட்ரஸ் பண்ணினா மாத்திரம் போதாது; ஆக்ஸஸரிஸூம் நல்லா இருக்கணும். ரிச் லெதர் பேக் வாங்குங்க'' என்று அறைகூவல் விடுக்கும் ஹுசைனிக்குப் பிடித்த ஸ்டைல் நபர் யார் எனக் கேட்டபோது, ''சாபு சிரில் அட்டகாசங்க! அமேஸிங் ட்ரஸ்சென்ஸ். சானியா மிர்ஸாவின் ஸ்டைல் சும்மா பின்னுது... நடிகர்களில் கமல் எப்பவுமே வெல்ட்ரஸ்டு. த்ரிஷா, நல்லா ட்ரஸ் பண்றாங்க. கங்க்ராட்ஸ். கனிமொழியின் டேஸ்ட் சூப்பர்ப்'' என லிஸ்ட் போட்டுக் கலவரப்படுத்துகிறார்.



* ஹுசைனி

அது சரி...ஹுசைனிக்குப் பிடிக்காதது என்ன? ''காதிலிருந்தும் மூக்கிலிருந்தும் கொத்தாக க்ரோட்டன்ஸ் கணக்கில் முடி இருந்தால், எனக்கு மட்டுமில்லீங்க யாருக்குமே அருவருப்பு வரும். பெண்களும், முகத்திலிருக்கும் மச்சத்திலிருந்து எட்டிப் பார்க்கும் முடியைக் கட் பண்ணுவது நல்லது'' என ஹானஸ்ட் ஹுசைனியாகப் பேசுகிறார்.

**- லதா சேகர்**






# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**4343 8888, 2225 1522, 2225 0623, 2225 1324,**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 68 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# - சத்குரு ஜக்கி வாசுதேவ் பேட்டி

# ஈஷாவின் அடுத்த தலைவர்?

**சத்குரு ஜக்கி வாசுதேவ் - ஆன்மிகத்தின் உண்மைத் தன்மை நோக்கி மக்களை ஆற்றுப்படுத்துகிற தலைவர்களில் முக்கியமானவர். ஆன்மிகம் மற்றும் சமூகம் சார்ந்த அடிப்படையான சில கேள்விகளோடு அவரைச் சந்தித்தோம். ஆழமாகவும் விரிவாகவும் வந்து விழுந்த அவரது பதில்கள்......**

*சில மாதங்களுக்கு முன்பு, உலக பொருளாதார அமைப்பு கூட்டத்தில் தாங்கள் கலந்துகொண்டதாகக் கேள்விப் பட்டோம். எந்தக் காரணத்துக்காக உங்களை அழைத்தார்கள்? நீங்கள் பொருளாதார சீர்திருத்தங்கள் குறித்து, புதிய சிந்தனைகள் ஏதேனும் தெரிவித்தீர்களா?*

''உலகப் பொருளாதார அமைப்பு என்பது பொருளாதார விவகாரங்களை மட்டுமல்ல... வறுமை, கல்வி, சுற்றுச் சூழல் போன்ற முக்கிய விஷயங்களை நோக்கியும் தமது பார்வையைச் செலுத்துகிறது. எப்படிப்பட்ட பொருளாதார மாற்றங்களும் சீர்திருத்தங்களும் மனித குலத்துக்கு நன்மை அளிப்பதாக இருக்க வேண்டும். இப்போது பல்வேறு துறைகளில் மாற்றங்களும், திருத்தங்களும், ஒரு காலகட்டத்துக்குப் பின்னர் எதற்காகக் கொண்டு வரப்பட்டன என்பது மறக்கப் பட்டு விடுகிறது. குண்டூசி தயாரித்தாலும், விண்கலம் தயாரித்தாலும், நோக்கம் உலக மக்கள் நல்வாழ்க்கைதான். தொழில்நுட்பம் தவறானதல்ல... அதை வடிவமைக்கும் நிபுணருக்கு மக்களின் நாடித் துடிப்பும், ஏழை எளிய மக்களின் தேவையும் தெரிந்திருக்க வேண்டும். பொருளாதார வளர்ச்சிக்கான நமது போராட்டத்தில் 'மனித முகம்' மறக்கடிக்கப்படக் கூடாது. இந்தப் பார்வை இல்லாததால்தான் எளிய மனிதனுக்குக் கொடுமையும் அநீதியும் இழைக்கப்படுகின்றன. பொருளாதாரத்தைத் திசைதிருப்பும் அதிகாரம் படைத்தோர் போடும் திட்டங்களெல்லாம், செல்வந்தர்களின் வாழ்க்கையை வளங்கூட்டுவதாகவே அமைந்திருக்கிறது. 'மனிதனாகச் சிந்தியுங்கள்' என்று நிபுணர்களை வேண்டிக்கொண்டதே அங்கே நான் பேசியதன் சுருக்கம்.''

*நமது நாட்டின் தொன்மைமிக்க கலாசாரத்தின் முதுகெலும்பான ஆன்மிகம், இயந்திர யுகத்தில் எந்த அளவுக்கு ஆரோக்கியமாக இருக்கிறது?*

''நல்ல ஆரோக்கியத்துடன்தான் இருக்கிறது. ஆனால், வெறும் முதுகெலும்புடன் மட்டுமிருந்தால் என்ன பிரயோஜனம்? எலும்பு மண்டலங்களுடன் இணைந்த சதையும் ரத்தமும் தேவையாயிற்றே. எனவே, உடல் இயங்குவதற்குத் தேவையான சதையையும் ரத்தத்தையும் செலுத்தி, அந்த ஆன்மிக எலும்புக்கூட்டை, ஒட்டுமொத்த மனிதனாக இயக்குவதற்கான மார்க்கத்தைதான் நாங்கள் இங்கே சொல்லித் தருகிறோம். ஆன்மிகப் பயணத்தில் நுழைந்துவிட்ட கலாசார சீரழிவுகளை அடையாளம் கண்டு, அவற்றைப்

புறந்தள்ள வழி சொல்கிறோம். இதை ஒரு விஞ்ஞானமாகக் கொடுக்கிறோம். இல்லையென்றால், அந்த எலும்புக்கூடு, உங்கள் வீட்டு அலமாரியில் உங்களைப் பார்த்து இளிக்கும். வெறும் எலும்புகள் எப்படி ஆரோக்கியமானதாகக் கருதப்படும்? இப்படிப்பட்ட ஆன்மிகச் சீரழிவுக்கு நமது வறுமையும் ஒரு காரணம். பசியோடு இருப்பவனிடம் தியானத்தைப் பற்றிப் பேசுவது குற்றம் மட்டுமல்ல; ஆபாசம். எனவே, மனிதனின் அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்பட வேண்டும். அதன் பிறகு ஆன்மிகப் பயணத்தில் அவனைக் கூட்டிக் கொண்டு போவது சுலபம்.''

**ஆத்திகம் - நாத்திகம் உங்கள் பார்வை என்ன?**

''சமீபத்தில் ஒரு தலைவர் என்னைப் பார்க்க வந்தார். 'கடவுள் இல்லை என்று நான் நம்புகிறேன்' என்றார். உடனே நான், 'அந்த நம்பிக்கை கூட எனக்கில்லை' என்றேன். (சிரிக்கிறார்) 'கடவுள் இருக்கிறார்' என்ற நம்பிக்கை ஒரு புறம்; மறுபடியும் 'கடவுள் இல்லை' என்ற நம்பிக்கையுடன் ஒரு சாரார். இரண்டுமே நம்பிக்கைதான். ஆனால், இந்த இருசாராருமே, அவர்கள் அறியாத ஒன்றை, தெரியாத ஒன்றைப் பலமாக நம்புகிறார்கள். உங்களுக்கு நீங்களே, உண்மையாக இருக்க முடியாத இயலாமையின் வெளிப்பாடுதான் இது. சமூகச் சூழலுக்கு ஏற்றபடி ஒரு நம்பிக்கையை உருவாக்கிக் கொள்கிறீர்கள். ஆத்திகர்கள் - நாத்திகர்கள் இருவருமே, தங்கள் எல்லைக்குட்படாத ஒரு விஷயத்தில் நம்பிக்கை



வைக்கிறார்கள். என்னைப் பொறுத்தவரை இருவருக்கும் அதிக வித்தியாசம் இல்லை.''

***இப்போது நடைமுறையில் இருக்கிற கல்வித் திட்டங்கள் திருப்தியளிக்கின்றனவா...?***

''இந்தக் கல்வித் திட்டம் வேலை வாய்ப்புகளைக் கொடுத்திருக்கிறதே தவிர, மாணவச் செல்வங்களை நல்ல மனிதனாக மாற்றும்படி வடிவமைக்கப்படவில்லை. இதுதான் நமக்கேற்பட்ட பெரும் இழப்பு. ஆனால், நமது நாட்டில் குருகுலக் கல்வி என்பது வேலைக்காக வடிவமைக்கப்படவில்லை. வாழ்க்கையின் சகல பரிமாணங்களையும் கற்றுக் கொடுப்பதாக, உணர வைப்பதாக அது அமைக்கப்பட்டது. ஆனால், நமது நாட்டில் தொடர்ந்து நிலவும் வறுமை காரணமாக, படிப்பு என்பது சம்பாதிப்பதற்கான ஒரு கருவியாக மாற்றப்பட்டு விட்டது. 'நல்ல மனிதர்களை' உருவாக்கும் கல்வி முடக்கப்பட்டது. 'ஈஷா'வால் இப்போது நடத்தப்படும் கிராமப்புற கல்வி நிலையங்களில்கூட, வேலை வாய்ப்பைக் குறி வைத்து நடத்தப்படும் கல்விதான் போதிக்கப்படுகிறது. ஆனால், ஈஷா ஹோம் பள்ளியில், இந்தக் கல்வித் திட்டத்துடன், குழந்தைகளுக்கு வாழ்க்கையைப் பற்றிய அறிவை விசாலப்படுத்தும் அளவிலும் பாடத்திட்டங்கள் இருக்கின்றன. இந்தக் கல்வியாண்டிலிருந்து ஈஷா ஸம்ஸ்கிருதி என்ற கல்வி முறையைக் கொண்டுவரப் போகிறோம். பெற்றோர்கள் ஆறு வயதில் குழந்தைகளைக் கொண்டு சேர்த்துவிட வேண்டும். அடுத்த பத்து வருடங்களுக்கு அவர்கள் இங்கேதான் படிக்கவேண்டும். 'இடையில் விலகிக் கொண்டு போக மாட்டோம்' என்று பெற்றோர்கள் உறுதிமொழி கொடுக்க வேண்டும். ஸம்ஸ்கிருதியில், பல்கலைக் கழகத்துக்கு மாணவர்களைத் தயார் செய்ய மாட்டோம். நமது குருகுல பாரம்பரிய கல்வியைச் சொல்லித் தருவோம். இதில் இசை, நாட்டியம், வீர, தீர கலைகள்,யோகா, ஸமஸ்கிருதம், தமிழ் இலக்கியம்... என்று எந்தத் துறையையும் விட்டு வைக்காமல், எல்லாவற்றையும் சொல்லித் தருவோம். ஒரு மலரைப் பற்றிச் சொல்லித் தர வேண்டுமென்றால், அதைப் பல கூறுகளாக வெட்டிப் புரியவைக்கிறார்கள். அதற்குப் பதில் அந்த மலரின் நறுமணத்தை உணர்ந்து, அனுபவித்துப் புரிந்துகொள்ள வாய்ப்பளிப்போம்.

**"என்னைப் பொறுத்தவரை ஆத்திகருக்கும் நாத்திகருக்கும் அதிக வித்தியாசம் இல்லை!"**

***குரான், பைபிள், கீதை போன்ற மறை நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் கருத்துகளை காலத்துக்கேற்ப திருத்திக்கொள்ளலாமா?***

''மறை நூல்களில் பதிவு செய்யப்பட்டிருப்பவை கடவுளின் குரலாக, அவரது வார்த்தைகளாக நாம் நம்பும் நிலையில், அவற்றை மாற்றுவதற்கு நீங்கள் யார்? யாருக்காவது அவற்றில் உள்ளவற்றை மாற்றத் துணிவு இருக்கிறதா? மாற்றம் என்று வாய் திறந்தாலே உங்களைக் கொல்ல சிலர் தயாராகி விடுவார்கள். ஆனால், மனிதர்கள்தான் அவற்றை எழுதினார்கள்; சில அம்சங்கள் இப்போதைய காலகட்டத்துக்குத் தேவை, மற்றவை தேவையில்லை என்று நினைத்தால் மாற்றம் செய்யலாம், தவறில்லை. இன்றைக்குத் தேவையான சமூகக் கட்டமைப்பைப் பற்றி நாம் ஏன் மறுசிந்தனை செய்யக்கூடாது? ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட நூல்கள்

தான் வழிகாட்ட வேண்டுமென்று அவசியம் இல்லை. மற்றபடி அந்த மறை நூல்களை ஓர் இலக்கியமாகப் படிப்பது குறித்து எனக்கு எந்தப் பிரச்னையும் இல்லை. இந்தியாவைப் பொறுத்தமட்டில் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கைச் சூழல் மாறுபடும். எனவே, தனி மனிதர் ஒவ்வொருவரும் அவர்களுக்குள்ளாகவே வகுத்துக் கொண்ட தர்மத்தைத்தான் கடைப்பிடிக்க வேண்டும். இந்தத் தர்மத்தைக் கடைப்பிடிக்கும்போது கடவுள்கூட தேவைப்பட மாட்டார். வாழ்க்கையை, ஈடுபாட்டோடும், உணர்ச்சிமயமாகவும் தொடர்புபடுத்திப் பார்க்கிறோம். கடவுளோடும் அதே ஈடுபாடு, உணர்ச்சிப் பிணைப்புதான் நமக்கு. மறை நூல்களில் இன்றைய உலகியல் வாழ்க்கைக்குத் தேவையானது இருந்தால் எடுத்துக் கொள்ளுங்கள். இல்லையேல் ஒதுக்கித் தள்ளுங்கள்.''



***ஈஷா யோக மையம் இப்போது பிரம்மாண்டமாய், பலவித ஆக்கபூர்வமான செயல்பாடுகளுடன் வளர்ந்து நிற்கிறது. ஈஷாவை வழி நடத்த உங்களுக்குப் பிறகு எதிர்காலத் தலைமைக்கு யாராவது தயார் செய்யப்படுகிறார்களா?***

''(சிரிக்கிறார்) இந்த அமைப்பு அல்லது நிறுவனம் குறிப்பிட்ட நோக்கத்துக்காகத் துவங்கப்பட்டது அல்ல. இந்த நிகழ்வு ஒரு கட்டாயத்தில் உருவானது என்றே சொல்லலாம். இங்கே வேலை செய்யும் தொழிலாளர்களைத் தவிர, மற்றவர்கள் அனைவரும் தன்னார்வத் தொண்டர்களே. அவர்கள் இங்கே இருப்பதும் போவதும் அவரவர் இஷ்டம்தான். இங்கே அரண்மனை வாரிசோ, பட்டமோ, பதவியோ, பாரம்பரியமோ எதுவும் கிடையாது. மதம், ஜாதி அடிப்படையில் இந்த நிறுவனம் உருவாக்கப்படவில்லை. ஒரு சில மத அமைப்புகளைப் பார்த்தால் தலைமைப் பொறுப்பிலிருப்பவரின் குடும்ப அங்கத்தினர்களே அங்கே கோலோச்சுகிறார்கள். இங்கு நடக்கும் ஆன்மிகப் பயிற்சிகளில் வழி காட்டும் பொறுப்பில் நான் இருந்தாலும், நிர்வாகம் என்பது, முற்றிலும் ஜனநாயக முறைப்படிதான் நடக்கிறது. இந்த அமைப்பே, இயக்கமே, ஒரு மாபெரும் சக்தியாக உருவாகிவிட்டது. அந்தச் சக்தியே எதிர்காலத்திலும் வழிநடத்தும். 'எனக்குப் பின்னே இவர்தான்' என்று அடையாளம் காட்டி எவரையாவது முன்னிறுத்துவது, தேவையற்றது. இங்கிருப்பவர்களை உற்சாகப்படுத்துவது அவர்கள் பெறும் ஆன்மிக அனுபவங்களே. அந்த அனுபவம் பெற்றவர்கள் எதிர்காலத்தில் ஈஷா மையத்தை இப்போதுள்ள அதே ஜனநாயக முறையில் வழிநடத்துவார்கள்.''

***ஆன்மிகத் தலைவர்கள் ஒன்றுகூடி, ஏன், அரசியல் சமூகப் பிரச்னைகளில் மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டக் கூடாது...?***

*(இந்தக் கேள்விக்கும் வேறு பல வினாக்களுக்குமான பதில்களுடன் அடுத்த வாரம் தொடர்கிறது சத்குருவின் பேட்டி)*

சந்திப்பு : **ப்ரியன்**

அட்டை மற்றும் படங்கள் : **ஸ்ரீஹரி**




**ஸ்கூட்டரில் பயணம் செய்யும் கொஞ்ச நேரத்திலேயே கண்ணில் தண்ணீர் வருகிறது. என்ன காரணம்?**

**- ராஜேந்திரன், கோவைத்தூர்**



* அருள்மொழிவர்மன்

**கண் மருத்துவர் டாக்டர் அருள்மொழிவர்மன் :** விடியற்காலையில் என்றால், எதிர்ப்புறம் வேகமாக அடிக்கும் குளிர்க் காற்றின் அழுத்தம் காரணமாகக் கண்ணில் நீர் வரலாம். மற்றபடி, எந்த நேரத்தில் பயணம் போனாலும் கண்ணில் நீர் வருகிறது என்றால், உங்களுக்குப் பெரும்பாலும் தீவிர 'டஸ்ட் அலர்ஜி' இருக்க வாய்ப்புண்டு. பாதுகாப்புக் கண்ணாடிகளை வண்டியில் செல்லும்போது அணியுங்கள். அல்லது குறைந்தது வைஸர் உள்ள ஹெல்மெட்டாவது அணியுங்கள்.

தண்ணீர் வருவதோடு கண்களில் எரிச்சலோ, அரிப்போ வண்டியில் செல்லும்போதெல்லாம் ஏற்படுகிறது என்றால், கண் மருத்துவரின் ஆலோசனை கட்டாயம் தேவை.



**என் புகுந்த வீட்டில் எல்லோரும் மிகவும் சத்தம்போட்டுப் பேசுகிறார்கள். இதனால் என் காதுகள் பாதிக்க வாய்ப்பு உண்டா?**

**- பூர்ணிமா, மதுரை**

**காது - மூக்கு - தொண்டை நிபுணர் டாக்டர் எஸ்.ஆர்.ரவி :** இதனால் பாதிப்பு வராது. ஆனால், சத்தமான இசையைத் தொடர்ந்து கேட்பது காதுகளைப் பாதிக்கும். இந்தக் கால இளைஞர்கள் எம்.பி.3

# இசையா...

ப்ளேயர், ஹெட் செட் என்பதையெல்லாம் பயன்படுத்தி உச்ச ஒலியில் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இதன் பாதிப்பு கொஞ்ச காலத்தில் தெரிய வரும்.

துரதிர்ஷ்டவசமாக கண்களின் குறைபாடுகளை நாம் சட்டென உணர்வது போல, கேட்கும் திறன் குறைவதை நாம் உடனடியாக உணர்வதில்லை. இதனால் காதுகள் மிகவும் பழுதடைந்த பிறகுதான் பலரும் மருத்துவ உதவியை நாடுகிறார்கள்.

தொழிற்சாலைகளில் அதிக சத்தம் எழும் சூழலில் பணியாற்றுபவர்களுக்கு நாளடைவில் கேட்கும் திறன் முழுவதுமாகக்கூட மறைந்துவிடலாம்.

எனவே இந்தத் தொழிலாளர்கள் இயர் மஃப் எனப்படும் காதுகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் சிறிய கருவியைப் பொருத்திக்கொள்ளலாம்.

– ஜி.எஸ்.எஸ்.



# இம்சையா?

நடிப்பைக் காட்டிலும் சர்ச்சைகளுக்காக அதிக கவனம் பெற்றவர் நிலா. இப்போது, ஆர்யாவுடன் ஜோடி சேர்ந்துவிட்டதாகப் பரபரப்பாகப் பேசப்படுகிறார். கொஞ்சம் பேசியபோது கிடைத்த **பழைய பல்லவி.**

ஆர்யா என்னோட நெருங்கிய நண்பர். நண்பர்கள் மூலமா இருவரும் சந்திச்சோம். அப்புறம் நாங்க நல்ல நண்பர்களாயிட்டோம். இதுக்கு மேல நான் எதுவும் சொல்ல விரும்பலை. எங்களைப் பத்தி எழுதற செய்திகள் எல்லாம், காதுல விழுந்துட்டுதான் இருக்கு. என்னோட பதில் இதுதான் - தனிப்பட்ட வாழ்க்கையில யாரும் குறுக்கிடாதீங்க. அதை நான் விரும்பலை.

**அதைவிடப் பழைய பல்லவி :**

எனக்கு, தெலுங்குப் படங்கள்ல நிறைய வாய்ப்புகள் வருது. அதனால் நான் அங்க கவனம் செலுத்தறேன். என்னோட திறமைகளை அங்கதான் முழுமையா வெளிப்படுத்த முடியுது. தமிழ் சினிமாவுல நல்ல வாய்ப்புகளுக்காகத் தொடர்ந்து காத்துக்கிட்டிருக்கேன். 'அன்பே ஆருயிரே' மாதிரி படம் மறுபடியும் அமையணும். திரை உலகோட வளர்ச்சியை அதனோட தொழில்நுட்பத்துலதான் பார்க்கமுடியும். தெலுங்கைவிட தமிழ்லதான் சிறப்பான தொழில்நுட்பம் இருக்கு. எனக்கு, ஹிந்தியில பெரிய பெரிய வாய்ப்புகள் கிடைச்சாலும், கண்டிப்பா தமிழ் சினிமாவை விட்டுப் போயிட மாட்டேன். தமிழ் சினிமாவுல இருக்கிற எல்லா நடிகை



# 'நிலா'வின்

களும் வெளிமாநிலங்களி லிருந்து வந்தவங்கதான். அந்தளவுக்கு இங்கே மொழி பேதம் பார்க்காம, திற மைக்கு ஆதரவு கொடுக் கறாங்க.

**அனு பல்லவி :**

என்னோட முதல் படத்திலிருந்தே இங்கே என்னை எல் லோருக்கும் நல்லா தெரிஞ்சிருக்கு. அத னால இங்கே எனக்கு எல்லாமே சுலபமா இருந்தது.

**சரணம் :**

அந்தப் படத்துல நடிச்சதுக்காக நான் வருத்தப்படறேன். இனிமேல் நான் உஷாரா இருக்க விரும் பறேன். இதனால தமிழ் சினிமாவைத் தவறா நினைக்கலை. தனிப் பட்ட நபர்களோட தவறு களுக்காக திரை உலகைக் குத்தம் சொல்ல முடியாது.

**சிட்டஸ்வரம் :**

ஷ்ரேயா, பாவனா இவங்க ரெண்டு பேரையும் தமிழ் சினிமாவோட முக்கியமான நடிகைகளா நான் நினைக்கறேன்.

**அதுசரி நிலாவின் ஆம்ஸ்ட் ராங்தான் யார்...?**

**- செந்தில்**

# ஆம்ஸ்ட்ராங்!

● என்.காளிதாஸ், சிதம்பரம்

***மனைவியை 'டி' போட்டு அழைப்பீர்களா?***

அவள் என்னை 'டா' போட்டு அழைப்பதற்குள், நான் முந்திக்கொண்டு ஆ'டி', பா'டி', அல்லா'டி' அவளை, மன்றா'டி' கெஞ்சிக் கூத்தா'டி' முடிந்தவரை போரா'டி', அவளுக்குப் பிடித்த வி.சி'டி', டி.வி.'டி' வாங்கித் தந்து அசடு வழிந்தப'டி' அழைப்பதுண்டு.

● ஆர்.கோபாலன்,
மேற்கு மாம்பலம்

***தாலியைப் பார்த்துத் திருமணமான பெண்கள் என்று அறிவதுபோல், திருமணமான ஆண்கள் எதை அடையாளமாக அணியலாம்?***

திருமணமான ஆண்களுக்கு அடையாளம் தேவையில்லை. பார்த்தாலே தெரிந்துவிடும். அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நால்வகை குணங்கள் முகத்தில் அப்பிக்கிடந்தால் அவன் திருமணமானவன் என்று அவனையே அடித்துச் சொல்லிவிடலாம்.

● வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு

***'ஒரு கன்னத்தில் அறைந்தால், மறு கன்னத்தைக் காட்டு' என்ற கொள்கை இந்தக் காலத்துக்குப் பொருந்துமா...?***

எதிராளியின் கன்னத்தில் அறைவது, அந்தக் கால கி.மு.வழக்கம்... இந்தக் காலத்தில் கழுத்தை அறுத்து கி.பி. (கிள்ளிப் பிய்த்துப்) போட்டு 'neck-less' ஆக்கிவிடுவார்கள். அதனால்தான் கழுத்தை அறுப்பவர்களுக்கு cut-throat என்ற பெயர் வந்தது.

● ரகுராமன், மதுரை

***'நேனோ' டெக்னாலஜி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?***

மருத்துவம் வரை





# கிரேஸியைக் கேளுங்கள்

வளர புதுப்புது வியாதிகளும் புழக்கத்துக்கு வருவது போல, டெக்னாலஜி வளர வளர பொல்யூஷன், சைபர் க்ரைம், எஸ்.எம்.எஸ். அநாகரிகங்கள் என பக்க விளைவுகளும் சூரபத்மன் போல வளர்கின்றன. எனக்கென்னமோ கொஞ்ச நாளைக்கு no-no டெக்னாலஜி என்று இருப்பது தேவலாம் எனத் தோன்றுகிறது. இது பற்றிய அறிவு பூர்வமான உதவிக்கு அணுகவும் 'டிஜிட்டல் கேண்டீன்' இரா.முருகனை.

● **ஜி.ராஜேஷ், அயன்புரம்**

**75 வயது காணும் எழுத்தாளர் ஜெயகாந்தன் பற்றி..?**

பொது அறிவு - G.K.- General knowledge.

புது அறிவு - J.K. - Jayakanthan knowledge.

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**டைரி எழுதும் பழக்கம் உண்டா?**

டைரி எழுதுவதற்கு 'யார் படித்தாலும் கவலையில்லை' என்ற 'டைரியம்' வேண்டும். பால், லாண்டரி டைரி மட்டும் எழுதுவேன்.

● **என்.கோமதி, நெல்லை**

**கடவுள் ஒரு நாள் உலகைக் காணத் தனியே வந்தால்...?**

பாவம், கன்னா பின்னான்னு ரோடை கிராஸ் பண்ணுவார். ஆட்டோக்காரன் சடென் பிரேக் போட்டு நிப்பாட்டி, 'இன்னா சாமி... ஊருக்குப் புச்சா... வூட்ல சொல்லிட்டு வந்துட்டியா?' என்று வந்த கடவுளை வரவேற்பான்...

● **பி.சிவா, பாளையங்கோட்டை**

**பெண்கள் அதிகம் நம்புவது கணவனையா... கடவுளையா...?**

கடவுளையே நம்பி வாழ்ந்து, அந்தக் கடவுளையே கணவனாக அடைந்தவர்கள், ஆண்டாளும் மீராவும். கடவுள் நிலைக்கு உயர்ந்த கணவனை, கடவுளாகவே நம்பி வழிபட்டு வாழ்ந்தவர் அன்னை சாரதா மணி தேவியார்... கடவுளை நம்புவது ஆன்மிகம். கணவனை நம்புவது love கீகம்.

# பூலோக ஊர்!




# கல்கி





2008 மே 4
சர்வதாரி சித்திரை 22
மலர் : 66
இதழ் : 40


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## பரமசிவன் கழுத்துப் பாம்பாக பாலு!

**வி**வகாரம் நீதிமன்றத்தில் இருக்கிறது என்கிறார் டி.ஆர்.பாலு! தமது செல்வாக்கைப் பயன்படுத்தி தமது மனைவி - மகன்களின் நிறுவனங்களுக்குக் குறைந்த விலையில் எரிவாயு பெற்றுத் தரவில்லை என்று மறுக்கிறார். தாம் அமைச்சராக இல்லாத காலகட்டத்தில், 1999லேயே போடப்பட்டு, 2004ல் அரசியல் காரணங்களுக்காக ரத்து செய்யப்பட்ட ஒப்பந்தத்தைத் திரும்பவும் நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கே அந்நிறுவனங்கள் போராடி வருவதாகக் கூறுகிறார்!

அப்படியெனில், மார்ச் 2007ல் பாலு எதற்காக கெயில் உயர் அதிகாரியிடம் இந்த நிறுவனங்களுக்கான எரிவாயு சப்ளை குறித்துப் பேச வேண்டும்? அதுவும் பெட்ரோலியத் துறை அமைச்சரைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு பேச வேண்டும்?

சுப்பிரமணியம் சுவாமியின் ஆதாரபூர்வமான குற்றச்சாட்டுப்படி, பாலு தமது குடும்ப நிறுவனங்களுக்கு எரிவாயு சப்ளை செய்ய அவ்வதிகாரிகளை வற்புறுத்தியுள்ளார். அதற்கான ஒப்பந்தம்போட ஆணையும் பிறப்பிக்கப்பட்டுள்ளது. அந்த அத்துமீறிய ஆணையை எதிர்த்து தமிழ்நாடு மின் உற்பத்தியாளர்கள் சங்கம், பெட்ரோலியத் துறை அமைச்சரிடம் முறையிட்டது; நீதிமன்றத்திலும் முறையிட்டு தடையுத்தரவு பெற்றது.

நீதிமன்றத் தடையானது, ஊழல் நடந்ததற்கான வலுவான ஆதாரங்கள் இருந்தாலன்றி வழங்கப்பட்டிருக்காது. ஆனால், தமது

அயோத்தி யாத்திரை
அந்த ரதம் ஒழிக!
ஹிந்துத்வா ரதம்
நாத்திக ரதம்
ராமனாவது பாலமாவது
பொங்கலே புத்தாண்டு
பஞ்சாங்கம் படிக்காதே
விவேகானந்தர் இல்லத்தைத் திருப்பித்தா




குடும்பத்துக்குத்தான் ஏதோ பெரிய அநீதி நிகழ்ந்துவிட்டதுபோல பாலு ஒரு தோற்றத்தை உருவாக்க முயற்சி செய்கிறார்.

நல் மரபுகளில் நம்பிக்கைகொண்ட அமைச்சராயிருந்தால் ராஜினாமா செய்ய வேண்டும். எல்லா குற்றச்சாட்டுகளும் பொய் எனில், அதனை நிரூபித்துவிட்டு மீண்டும் பதவியில் அமரலாம்.

ஆனால், பாலுவோ தமது பேரிலான புகார்கள் பிரதமரிடம் தரப்பட்டிருப்பதால் பிரதமர்தான் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று பரமசிவன் கழுத்துப் பாம்பாகப் பேசுகிறார்! மன்மோகன் சிங் இது குறித்து வாயே திறக்கவில்லை. தி.மு.க. தலைவர் மு.க.வோ மூச்சுக்கூட விடவில்லை!

முறைகேடாக பணம் பெற்றுக்கொண்டதாக நிரூபணமானால்தான் குற்றமேயொழிய, ஆட்சியிலும் பதவியிலும் உள்ளோர் தங்கள் குடும்ப நலனுக்கும் கட்சி நலனுக்குமான விஷயங்களைச் சாதித்துக்கொள்ள தங்களது பதவி - செல்வாக்கைப் பயன்படுத்துவது தப்பேயில்லையாக்கும் என்ற போலித்தனமான வாதத்தைத்தான் இச்சம்பவம் வலியுறுத்து கிறது!

சொந்த விருப்பு - வெறுப்புகளின் சந்தையாகிப் போன அரசியல் பொதுவாழ்வில், ஒரு தயாநிதி மாறன் 'கட்சி விரோத'ப் பணிக்காக உடனே வெளியே அனுப்பப்படுகிறார். ஆனால், ஒரு டி.ஆர்.பாலு, ஊழலுக்கான ஆவண சாட்சியங்கள் இருந்தும் பதவியில் தொடர அனுமதிக்கப்படுகிறார்.

இந்தப் போக்கு தொடர்ந்தால், தேசத்தின் உயிரும் ஆன்மாவுமான அதன் நேர்மைப் பண்பு வற்றிச் சுருங்கிவிடும். பொருளாதார முன்னேற்றமும் தொழில்நுட்பச் சாதனையும், உண்மை உறங்குகிற சவப்பெட்டிக்குப் போர்த்தப்பட்ட பகட்டலங்காரமாக மட்டுமே திகழும்! ●



# புள்ளிகள்... கோலங்கள்...

கன்னத்தில் அறைபட்டதுபோல் திடுக்கிட்டான் பூபதி. அவனால் காஃபியைக் குடிக்க முடியவில்லை.

''தைரியமா குடிங்க. அதில ஒண்ணும் விஷமில்லை...'' என்றார்.

''அதான் வார்த்தைல இருக்கே சார்.''

பொன்ராஜ், கந்தசாமியை அனுப்பி விட்டு, பூபதி பக்கம் திரும்பி, ''நான் சீரியலை நிறுத்திடலாமான்னு பார்க்கறேன்'' என்றார்.

அதிர்ச்சியில் பூபதிக்கு விழிகள் விரிந்தன.

''சார்... என்ன சொல்றீங்க?''

''ஆமா... புள்ளிகள், கோலங்களுக்கு ஒரு முற்றுப் புள்ளி வச்சிரலாம்னு..''

''ஏன்... ஏன் சார்?''

''மிஸ்டர் பூபதி. நான் பிஸினஸ்மேன். பணம் குறிக்கோள். அந்தவகையில் சீரியல் எனக்குக் காமதேனு. ஆனால், பணம் மட்டும் போதாது. வெற்றியோடு மன நிறைவு, மன நிம்மதி, சந்தோஷம் எல்லாம் சேர்ந்து வரணும்.''

''இதுல என்ன சார் பிரச்னை?''

''என்ன இல்லை? பட்டியல் போடட்டுமா. நான் சீரியல் துவங்கும் முன்னால, வீட்டில் டீ.வி. இருந்தது. ஆனால் டீ.வி. எந்நேரமும் பார்க்கிற பழக்கம் இருந்ததில்லை. நம்ம சீரியலை பார்க்கத் துவங்கி, படிப்படியாய் மத்த சீரியல்களையும் பார்க்க ஆரம்பிச்சுட்டாங்க. உடம்புக்கு முடியாத அம்மாகூட ராத்திரி பன்னிரண்டு வரை முழிச்சு டீ.வி. பார்க்கறாங்க. என் மனைவி கிட்டத்தட்ட சீரியல்களுக்கு அடிக்ட் ஆயிட்டா. என் தம்பி சந்திரசேகர் தெரியுமில்லையா? அவருக்கு இரண்டு குழந்தைங்க. படிப்புல கெட்டியா இருப்பாங்க. பெரியவங்களே டீ.வி. ஓவரா பார்க்கும்போது... அவங்க மட்டும் சும்மா இருப்பாங்களா? போட்டி போட்டு பார்க்கறாங்க. விளைவு... இந்த ஆறு மாசத்துல அவங்க 'ரேங்க்' சடசடனு கீழிறங்கிப் போச்சு...''

''.....''

''அதாவது பரவாயில்லை. சீரியல்ல வர்ற மாதிரியே குடும்பத்துல குழப்பங்கள் முளைக்குது. முக்கியமா ஒண்ணு சொல்லலாம். நீங்க ஒரு ட்ராக் கொண்டு போறீங்களே. கதாநாயகி கவிதாவோட தங்கச்சி நிலைமையை மறந்துட்டு, ஒரு ரிக்ஷாக்காரனைக் கண்மூடித்தனமா காதலிச்சு, அவனோடு ஊர் சுத்துவாளே... அது மாதிரியெல்லாம் நடக்குது மிஸ்டர் பூபதி. நம்ப முடியல. உண்மைனு தெரிய வரும்போது தாங்க முடியல...''

பூபதிக்கு உள்ளுக்குள் குளிரோடியது.

(தொடரும்)

**படுதலம் சுகுமாரன்**

---

**ஸ**த்ய ரிஷி என்று ஒரு முனிவர். அவர் ஹிமாசலத்தின் வடபுறத்திலே இருந்து கடும்தவம் இயற்றினார். பகவானும் அவருக்கு ஸேவை சாதித்தான். ''எனக்கு முக்தி கொடுக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார் ரிஷி. ''இருக்கட்டும்; உமக்கு மற்றொரு முறை முக்தி கொடுக்கிறோம். அதற்கு ஏற்ற இடத்திலே போய் யோகம் - தவம் - புரி; பாண்டிய நாட்டிலே உள்ள திருமெய்யத்துக்குப் போ'' என்று பெருமான் சொன்னான்.

உடனே முனிவர் பகவானை வேண்டினார். ''ரொம்ப நாட்களாக இங்கே இருந்து தவம் பண்ணிவிட்டேன்; இந்த இடத்தை விட்டுப் போக எனக்கு மனமில்லை. இதோ சித்ரசிலா என்கிற பாறை இருக்கிறதே; அதோ எனக்கு ரொம்பப் பிடித்த புஷ்பபத்ரா நதி இருக்கிறதே, இந்தப் பத்ரவடம் என்கிற பெரிய மரம் இருக்கிறதே - இவற்றையெல்லாம் விட்டுவிட்டுப் போவதற்கு மனசில்லை'' என்றார் முனிவர்.

''அதற்கென்ன, இந்த மூன்றையுமே திருமெய்யத்துக்கு எடுத்துக்கொண்டு போய்விட்டால் போயிற்று...'' என்று அங்கிருந்த பெரிய கல்லைப் பெயர்த்து திருமெய்யத்தில் இருத்தினான் பெருமான். அதுதான் இங்கே மதுரை - புதுக்கோட்டை சாலையின் இடையில் சத்தியகிரியாகக் காட்சி அளிக்கிறது. இங்கேயுள்ள சத்யபுஷ்கரிணிதான் அங்கேயிருந்த புஷ்பபத்ரா நதி; அதே பத்ரவடம் என்கிற மரம் இங்கேயும் இருக்கிறது.

* நின்ற திருக்கோலத்து மூலமூர்த்தி



## வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்

ஸத்யரிஷியும் இங்கு வந்தார். கடும்தவம் இயற்றினார். எம்பெருமான் அவருக்குக் காட்சி தந்தான் - ஒரு வைகாசி மாதம் புஷ்ய நட்சத்திரத்திலே தோன்றினான். உடனே ரிஷி முக்தி கொடுக்க வேண்டும் என்று வேண்டினார்.

இன்றைக்கும் அந்த வைகாசி மாசம் புஷ்ய நக்ஷத்திரம் தொடங்கி, பத்து நாட்கள் பிரம்மோத்ஸவம் நடக்கிறது திருமெய்யத்தில்.

ஆனால், காட்சி கொடுத்த பகவான் உடனடியாக ஸத்ய ரிஷிக்கு முக்தி கொடுத்துவிடவில்லை. ''மலையும் இங்கே இருக்கட்டும்; நானும் நீ கேட்டபடி வந்துவிட்டேன்... ஆனால், யார் இங்கே இவ்வளவு பெரிய கோயிலைக் கட்டுவது...?'' என்று கேட்டார்.

ரிஷியால் கோயில் கட்ட முடியுமா? தவம் பண்ணுவதற்குத்தான் முடியும்! அதனால், ''பாண்டிய தேசத்து அரசன் ஒருவன் - புரூரவஸ்- அவனுக்கும் முக்தி வேண்டும் என்ற ஆசை வரப்போகிறது. கண்டிப்பாக உம்மோடு சேர்த்து அவனுக்கும் முக்தி அளிக்கப் போகிறேன். அதுவரை யோகத்தைத் தொடரும்'' என்று பெருமான் சொல்லிவிட்டான்.

ரிஷியும் மறுபேச்சில்லாமல் யோகத்தைத் தொடர்ந்தார். அப்புறம் நடந்த கதை ரொம்ப



# மெய்யில் உறையும் மேன்மையன்

வேடிக்கையானது; ஆச்சர்யமானது. நெடுநாட்கள் பாண்டிய தேசத்தை ஆண்டு வந்த புரூரவஸ் மஹாராஜாவோடு, விளையாடி அவனுக்கு முக்தியும் அளிக்க வேண்டும் என்று பகவானுக்கு ஆசை வந்தது. அதனால் தானே ஒரு பன்றி உருவத்தை எடுத்துக் கொண்டார். இந்த வராக பெருமான், பன்றிக் கூட்டங்களையும் சேர்த்துக்கொண்டு ரொம்ப அட்டகாசம் பண்ண ஆரம்பித்தார். சேனையை அனுப்பிச் சண்டை போட்டுப் பார்த்தார்கள். யாருக்கும் அந்தப் பன்றி வசப்படுவதாகத் தெரியவில்லை. கடைசியில் புரூரவஸ், 'நானே வருகிறேன்' என்று வந்தான். பன்றி போக்குக் காட்டி, போக்குக் காட்டி இவ்விடத்துக்குக் கூட்டி வந்தது. தபஸ் பண்ணிக் கொண்டிருந்த ஸத்ய ரிஷியிடம் ராஜாவை இழுத்து வந்தது. சட்டென்று ரிஷியைப் பார்த்து, 'புரூரவஸ் வந்துவிட்டான்; புரூரவஸ் வந்து விட்டான்' என்று சொல்லி மறைந்துவிட்டது!

புரூரவஸ்ஸும் ஸத்ய ரிஷியும் சேர்ந்து பகவானைப் பிரார்த்திக்க, "இருவருக்கும் முக்தி கொடுக்கிறோம்; இதோ கொடுத்தோம்!" என்றான் பகவான். ஆனால், ஒரு விதி - ரிஷி இப்போதே புறப்பட்டு வந்து விடலாம். புரூரவஸ் ஒரு மூன்று ஆண்டுகள் மேலும் ஆட்சி புரிந்து, எனக்கு மண்டப - கோபுரங்களுடன்கூடிய கோயிலைக் கட்டிவிட்டுப் புறப்பட்டு வரலாம்" என்றார்.

அவ்வாறே புரூரவஸ் அமைத்ததுதான் மெய்யன் எம்பெருமானின் திருக்கோயில்.

இன்றைக்கும் இத்திருத்தலத்திலேயே, கோயிலுக்கு உள்ளேயே பூவராகப் பெருமானாக அந்த வராக பெருமான் ஸேவை சாதிக்கிறான்.

புரூரவஸ் அமைத்திருப்பது ரொம்ப விசாலமான கோயில். பெரிய கோபுரம். அதைத் தாண்டி உள்ளே மண்டபத்துக்கு வந்தோமென்றால், முதலில் இடது புறத்தில் கிழக்கு நோக்கிய திருமுக மண்டபத்தோடே உய்யவந்த நாயகி - உஜ்ஜீவன நாச்சியார் ஸேவை சாதிக்கிறார். அவளைத் தரிசித்து, அனுக்கிரஹம் பெற்று, அவள்


★ சத்ய புஷ்கரணி...

**கருடன், தம் தாயான வினதையின் சாபத்தைப் போக்க இங்கே தவம் புரிந்துதான் அம்ருதத்தையே பெற்றுச் சென்றார்.**



✱ கருடாழ்வார்...

பொரிசோடே பகவானிடத்திலே போக வேண்டும். முதலில் இடதுபுறத்திலே ஆதி சேஷனுக்கு அருளிய சயனித்த எம்பெரு மான்; அவருக்கு வலதுபுறத்தில் நின்ற எம்பெருமான் - திருமெய்யன், ஸேவை சாதிக்கிறார்.

சாதாரணமாக எல்லா சன்னதிகளிலும் மூலவர் விக்ரஹம் ஒரு பீடத்தின் மேல் அமைந்திருக்கும். அதற்கு வேண்டிய மருந்துகளெல்லாம் நிறைய கலந்து உள்ளே வைத்து 'ஜடிபந்தம்' செய்தால்தான் கீழே இருக்கிற பாத பீடம் பற்றிக்கொள்ளும். ஆனால், இந்தக் கோயிலில் ரொம்ப ஆச்சர்யமாக, நின்ற திருக்கோலத்து எம்பெருமானின் பாதங்களை ஸேவித்தால், அவற்றை அப்படியே பூமியில் வைத்துக்கொண்டிருக் கிறார் எம்பெருமான். பத்ம பீடமோ, ஜடிபந்தனமோ எதுவுமே இல்லை!

நடுவிலே பகவான்; ஒரு பக்கத்திலே ஸத்திய ரிஷி; அருகிலேயே புரூரவஸ் சக்கர வர்த்தி இருக்கிறார்கள். இவர் களுக்கு இடதுபுறத்தில் கரு டனும் நின்ற திருக்கோலத்தில் இருக்கிறார். கருடன் தம் தாயான வினதையின் சாபத் தைப் போக்க, இங்கே தவம் புரிந்துதான் அம்ருதத்தையே பெற்றுச் சென்றார்.

**வ**டபுறத்தில் எண் கோண வடிவில் சத்ய புஷ்கரணி. அதைப் பார்த்தாலே நீராட வேண்டும் என்று தோன்றும். சுற்றிலும் மதில்சுவரோடே, தோட்டம் துரவுகளோடே, கோட்டை - கொத்தளங்கள் மண்டபங்களோடே, கருமை யும் பச்சையும் கலந்திருக்கிற நீரோடே இந்தப் புஷ்கரணி காட்சியளிக்கிறது. 'எல்லோ ரும் எங்களிடத்திலே நீராடி பாபத்தைக் கழித்துவிட்டுப் போய்விட்டார்கள்... நாங்கள் சேர்த்து வைத்திருக்கிற பாவத்தை எங்கு கழிக்க?' என்று எல்லா நதிகளும் சேர்ந்து பரம்பொருளினி டத்தே இறைஞ்சிக் கேட்க, அவர் 'எல்லோரும் ஸத்ய புஷ்கரணிக்கு வாருங்கள். அதில் சேர்ந்தீர்களானால்

பாவம் தொலையும்' என்று சொல்ல, இதே இடத்தில் எல்லா நதிகளும் வந்து கலப்பதாக ஐதிகம். ஞாயிற்றுக்கிழமை இங்கே நீராடி மெய்யனைத் தரிசிப்பது மிக முக்கியமாகக் கருதப்படுகிறது.

நின்ற திருக்கோலத்து மெய்யனுக்கு அழகான ஸோமஸ்சந்த விமானம் (கோபுரம்) அமைந்திருக்கிறது. ஆனால், குடைவரை அமைப்பதென்பதால் இவருக்கு நேர் மேலே விமானம் வரவில்லை. சயனித்த எம்பெருமானுக்கோ மலையேதான் விமானமாக, மலையேதான் குடையாக விளங்குகிறது. அவ்வளவு ஆச்சர்யமான அமைப்பு என்பதால், இந்திய அரசின் தொல்பொருள் ஆய்வுத் துறையின் பராமரிப்பில் இருக்கிறது இந்தத் திருக்கோயில்.

திருமங்கையாழ்வார் மிகவும் உவந்த திவ்ய தேசம் திருமெய்யம். 108 திவ்யதேசங்களுள் 86 திவ்ய தேசங்களை இந்த ஆழ்வார் பாடியிருக்கிறார்! இவற்றுள் 47 திவ்ய தேசங்கள் இவரால் மட்டுமே பாடப்பட்டுள்ளன. அப்படியானால் இவருடைய ஏற்றம் எத்தகையது! திருமெய்யத்துக்கு மங்களாசாஸனம் செய்ததோடல்லாமல், வேறு பல திவ்யதேசங்கள் பற்றிப் பாடுகிறபோதுகூட இவர் அவற்றிலே திருமெய்யத்தைக் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார்.



பெண் பாவத்தில் திருமங்கையாழ்வார் பாடிய பாசுரத்தில், மெய்யானை நினைத்து நாயகி, மலையிலிருந்து விழும் அருவியாக உருகுவதாகப் பாடுகிறார். திருமெய்யத்தில் நாமும் ஒரு பக்கத்தில் மலையானைப் பார்க்கிறோம்; மறுபக்கம் அவனைக் கண்டு உருகும் பக்தர்களைப் பார்க்கிறோம். இந்த இரண்டும்தான் உலகிலே மெய்யாக இருக்கும் - பகவான் எப்போதும் மெய்யாக இருப்பார்; அவனுடைய உண்மைத் தொண்டர் எப்போதும் மெய்யாக இருப்பார் என்று உணர்கிறோம்.

மற்றபடி, எத்தனையோ வேறுபாடுகள் இந்தச் சமூகத்தில் காணப்பட்டாலும் அவை அத்தனையுமே களையப்பட வேண்டும். உயர்ந்தோன் - தாழ்ந்தோன்; படித்தவன்-படிக்காதவன்; இச்சாதியன் - அச்சாதியன், இக்குலம் - அக்குலம் போன்ற எல்லாவற்றையுமே களைந்துவிட வேண்டும். இது அத்தனையுமே இல்லாத, ஒரு சமுதாயத்தை உருவாக்க வேண்டும். 'நீ யார்?' என்று கேட்டால், 'நான் பக்தன்; திருமெய்யத்து எம்பெருமானுடைய அடியான்' என்கிற அளவிலே மட்டுமே நிற்க வேண்டும். பேதங்கள் தொலைந்த பக்தியில், அன்பில்தானே ஸத்தியம் உறைகிறது!

***(தேடுவோம்)***

சித்திரங்கள் : **வேதா**

படங்கள் : **ஸ்ரீஹரி**

## இப்போது விற்பனையில்...

விடுமுறை கொண்டாட்டம்

# கிரிக்கெட் திருவிழா!





# குட்டீஸ்களின் 'கோடை' ப்ளான்

32 பக்கங்களில்...

## அறிவோடு விளையாடு!



# கோகுலம்

மே 2008 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

**நேற்றுவரைக்கும் ஒரு குழந்தைத் தொழிலாளியாய் செங்கல் சூளையில் வேலை. ஆனால், இன்றைக்கு மராத்தான் ஓட்டத்தில் மாநில அளவில் சேம்பியன். எப்படிச் சாத்தியமாயிற்று சேலம் மாவட்டம் தைலம்பட்டி கவிதாவுக்கு...**

''அப்ப நான் ஏழாம் வகுப்புப் படிச்சிட்டு இருந்தேன். அப்பா நெசவுத் தொழிலாளி. அம்மா விவசாயக் கூலி. ஒரு நாள் எங்க அப்பாவுக்கு ஆக்சிடென்டுல இடது கை மூட்டு இறங்கிடுச்சு. உடம்பு தேறி வந்தும் அப்பாவால தறி ஓட்ட முடியலை. வீட்டுல வறுமை குடியேற



காம்ப்ளான் கதை

# மாரத்தான் மங்கை!

ஆரம்பிச்சது. அரைப் பரீட்சை எனக்கு நெருங்கிட்டு இருந்த சமயம் அது. ஸ்கூல விட்டு நின்னுட்டேன். சூளையில செங்கல் சுமக்கப் போனேன். அப்போ எனக்கு வயசு பன்னிரண்டு. தினமும் நாற்பது ஐம்பது ரூபா கெடைக்கும். நாங்க அஞ்சு பேரும் வயிறாரக் கஞ்சி குடிச்சோம்!'' என்று தான் 'குழந்தைத் தொழிலாளி' ஆன துயரத்தை மிரட்சியுடன் சொல்லும் கவிதாவுக்கு, தற்போது வயது பதினாறு.

''கவிதா, பள்ளிக்கூடத்துக்குப் போறதை நிப்பாட்டி ஒரு வருஷம் ஆச்சு. அவளோட டீச்சர் அன்புக்கரசி, வீட்டுக்கு வந்து எங்ககிட்ட பேசினாங்க. நல்லா படிக்கிற புள்ளைய ஏன் இப்படி நிப்பாட்டிட்டீங்கன்னு சத்தம் போட்டாங்க. அப்புறம் அவங்களே கவிதாவைக் கூட்டிட்டுப் போயி, 'உண்டு உறைவிடப் பள்ளி'யில சேர்த்துவிட்டாங்க. ஒரு வருஷம் அங்க படிச்சது. எங்களால புள்ளையைப் பிரிஞ்சு இருக்க முடியலை. கால் வயித்துக் கஞ்சி குடிச்சாலும், நம்ப வீட்லேருந்தே ஸ்கூலுக்குப் போகட்டும்னு அடுத்த வருஷமே நாங்க அழைச்சிட்டு வந்துட்டோம். ஊருக்குப் பக்கத்துல அழகப்பன்பாளையம்புதூர் அரசு உயர் நிலைப் பள்ளியில எட்டாவது சேர்த்தோம். அங்க பி.டி.மாஸ்டரா வந்து சேர்ந்த பாபு சார்தான், எங்க புள்ளைய இன்னைக்கு விளையாட்டுத் துறையில் இந்தளவுக்குக் கொண்டு வந்திருக்காரு!'' என்று நெகிழ்கிறார்கள் கவிதாவின் பெற்றோர்.

சேலம் மாவட்டம் மகுடஞ்சாவடியிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் உள்ளடங்கியிருக்கிறது தைலாம்பட்டி கிராமம். அங்கு பனை ஓலைக் குடிசையில் வசித்து வருகிறது கவிதாவின் குடும்பம்.

இப்பத்தான் பொதுத் தேர்வு எழுதினேன். எங்க ஊர்லேந்து ஸ்கூல் நாலு கி.மீ. இந்த மூணு வருஷமும் பள்ளிக்கு நடந்துதான் போனேன். ஒன்பதாம் வகுப்பு வந்தப்பதான், எனக்கு விளையாட்டுல ஆர்வம் வந்துச்சு. படிக்கறப்பவே எல்லா விளையாட்டுப் போட்டிகள்லயும் கலந்துக்க ஆரம்பிச்சேன். இத்தனைக்கும் பள்ளியில்

விளையாட்டு மைதான வசதிகூட கிடையாது. கோயில் மந்தையிலதான் ஓடி பயிற்சி எடுத்துக்கிட்டேன். தடை ஓட்டத்துக்கு, தென்னை மட்டையைக் கட்டி வைச்சுத் தாண்டித் தாண்டி ஓடுவேன்.

மாவட்ட அளவுல, மண்டல அளவுல போட்டிகள்ல கலந்துகிட்டுப் பரிசுகள் வாங்கினேன். நிறைய பரிசுக் கோப்பைகள். எனக்கு ரொம்ப உற்சாகமாய்டுச்சு. ஓட்டப் பந்தயம், லாங் ஜம்ப், ஹைஜம்ப், ட்ரிபிள் ஜம்ப் போட்டிகளில் மாவட்ட அளவில் பல பரிசுகள் வென்றேன். 2008ல் சேலத்தில் முன்னூறு பெண்கள் பங்கேற்ற எட்டு கி.மீ. மாரத்தான் பந்தயத்தில் முதலாவதாக வந்தேன். எல்லாத்துக்கும் உற்சாகம் தந்து வழிகாட்டினது பாபுசார்தான் - பி.டி.



மாஸ்டர்.

சென்னையில பிப்ரவரி மாசம், மாநில அளவுல விளையாட்டுப் போட்டிகள் நடந்துச்சு. மெரினா பீச் ரோட்டில் ஆறு கி.மீ. தூரம் மாரத்தான் ஓட்டப் பந்தயம். மூன்னூறுக்கும் மேற்பட்டவங்க கலந்துக்கிட்டாங்க. இருபத்தியொரு நிமிடங்களில் ஓடி வந்து, மாநில அளவில் முதலிடம் பெற்றேன். பத்தாயிரம் ரூபாய் பரிசு தந்தாங்க. ஹீரோ ஹோண்டா கம்பெனி சார்பா எலெக்ட்ரிக் ஸ்கூட்டி ஒண்ணு பரிசாத் தந்தாங்க.

2012 ஒலிம்பிக் போட்டியில பங்கேற்று, தங்கப் பதக்கம் வாங்கணும்ங்கறதுதான் என்னோட லட்சியம். அந்த நம்பிக்கை எனக்கு நிறையவே இருக்கு'' என்று சொல்லும் கவிதாவுக்கு காலை உணவு கம்பங்கூழ், மதியம் கேழ்வரகு ரொட்டி, இரவுக்கு ரேஷன் அரிசி சாப்பாடு.





* காற்றாய்ப் பறக்கும் கவிதா

வறுமையும் சாதனையாளர்களும் ரெட்டைப் பிறவி போல.

செய்திச் சித்திரம்: ஸ்ரீரங்கம் திருவரசு

# வாரிசு

அனிதாவும் ராகவனும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டனர்.

''சார், இப்ப வந்திடுவாருங்க'' என்று எட்டிப் பார்த்துச் சொன்ன பியூன் கத வோரம் நின்றுகொண்டான்.

மணமாகி நான்கு வருடங்களும், மூன்று மாதங்களும் ஆகின்றன. இதுவரை இவர்களுக்குக் குழந்தை பாக்கியம் இல்லை.

ராகவன், தன் நண்பனின் ஆலோசனைப்படி ஒரு மருத்துவரிடம் தங்களைப் பரிசோதித்துப் பார்த்தான். சிகிச்சை முடிவு எதிர்மறையாய் இருப்பதை அறிந்ததும், இருவருமே அதிர்ந்து போயினர்.

'புண்ணியத் தலம், அரச மரம் சுற்றுதல் போன்ற ஆன்மிக நம்பிக்கையை இனி மேலும் நினைப்பதில் அர்த்தமில்லை' என்று உணர்ந்த அனிதாவின் அம்மா, தன் மகளைக் கட்டாயப்படுத்துவதை யும் விட்டுவிட்டாள்.

இறுதியாக அனிதா வின் தோழி சொன்ன ஆலோசனையின்படி, ராகவனும் அனிதாவும் இந்தக் குழந்தைகள் காப் பகத்துக்கு வந்திருக்கின்றனர்.

'வாரிசு இல்லை' என்று எத்தனை நாட்கள்தான், வருந்திக் கொண் டும், தங்களை வருத்திக்கொண்டும் இருப்பது?

''இதோ சார் வந்துட்டாங்க'' என்று எட் டிப் பார்த்துச் சொல்லிய பியூன், மீண்டும் கதவோரம் இருந்த சாய்வில்லாத நாற்காலி யில் அமர்ந்துகொண்டான்.

அன்னை தெரசா குழந்தைகள் காப்பக முதல்வர் சரவணன் உள்ளே நுழைந்தார்.

அப்பொழுது அனிதாவும், ராகவனும் வணங்கியபடி எழுவதற்கு முற்பட்ட



போது, ''உட்காருங்க! உட்காருங்க!'' என்ற படி அவர்கள் முன்னிருந்த இருக்கையில் அமர்ந்தார்.

''உங்களை ரொம்ப நேரம் காக்க வைச் சுட்டேன்'' என்று சரவணன் சொல்லும்

போது, ''அதனாலென்ன?'' என்று யதார்த்த மாகச் சொன்னான் ராகவன்.

''நீங்கதானே, நேற்று ஃபோன் பண்ணி யது?''

விட்டு, ''இதைப் பாருங்க'' என்று நீட்டினார்.

அதை ஆவலுடன் வாங்கிய இருவரும், மனதுக்குப் பிடித்த கனிவான முகத்தைத்





தேடினர். அவர்களின் முகத்தில் தாய்மையின் பாசம் பொங்கிப் பிரவகித்தது. அனிதாவுக்கோ மனசு முழுக்க சந்தோஷ அலை அடித்தது. பின்பு அவர்களுக்குள் ஒரு கருத்துப் பரிமாற்றம் நடந்தது. இறுதியாக, அந்தப் புகைப்படக் கோப்பை சரவணனிடம் நீட்டிய ராகவன், ''இந்தக் குழந்தைதான் எங் களுக்குப் பிடித்திருக்கிறது'' என்று ஆள்காட்டி விரலால் சுட்டிக் காட்டினான்.

அதை வாங்கிப் பார்த்த ஒரு வினாடியில், அரை வினாடி மகிழ்ச்சியும், அடுத்த அரை வினாடியில் சோகமும் சரவண னின் முகத்தில் தெரிந்தது.

பின்பு சரவணனே, மெதுவாகச் சொன்னார், ''சார்! இந்தக் குழந்தைக்கு கால்... ஊனம்!''

அப்பொழுது ராகவன், ''சார்... ஊனம் என்பது அதைக் குறையென்று எண்ணுகிற மனத்தில் தான் இருக்கு. நாங்க இந்த குழந்தையையே தத்தெடுத்துக்கறோம்'' என்று தீர்க்கமாகச் சொன்னான்.

''சரி! உங்க விருப்பம்'' என்ற சரவணன், மேற்கொண்டு நிகழ வேண்டிய சட்டபூர்வ மான நடவடிக்கைகளை அவர்களுக்கு விவரித்தார். கவனமாகக் கேட்டுக் கொண்டவாறே சில குறிப்புகளையும் எடுத்துக்கெண்டான் ராகவன்...

விடைபெற்றுப் போகும்போதுதான் சரவணன் பார்த்தார். ராகவன் இடது கால் ஊனத்துடன் நடப்பதையும், அனிதா, அவருக்குக் கைலாகுக் கொடுத்து உடன் செல்வதையும். ●

''ஆமா சார்.''

''இங்கிருக்கிற எல்லா குழந்தைகளும் சேர்ந்து எடுத்துக்கொண்ட குழுப் புகைப் படத்தைக் காண்பிக்கிறேன். அதைப் பார்த்து, உங்க வாரிசைத் தேர்ந்தெடுங்க.''

''சரிங்க சார்'' என்று சொன்ன அனிதா வின் குரலில் ஆர்வம் இருந்தது.

பீரோவிலிருந்து ஓர் ஆல்பத்தை எடுத்த சரவணன், சில புகைப்படங்களைப் புரட்டி

27.04.2008 முதல் 03.05.2008 வரை

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** பழகுவதற்கு இனிய மேஷ ராசிக்காரர்களே... வெளியூர் பயணம் போகப் போறீங்க. கணவன் - மனைவி உறவுகள் நல்ல நிலையில் இருக்குமுங்க. உத்தியோகத்தில் பதவி உயர்வு உண்டுங்க. வியாபாரத்தில் சாதிப்பீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையை அதிகரிக்குமுங்க.



**ரிஷபம்:** திறமைக்குப் பெயர்போன ரிஷப ராசிக்காரர்களே... இந்த வாரம் முழுக்கக்கும் கோபம் இல்லாத மனிதராக இருக்கப் போறீங்க. புண்ணிய ஸ்தலம் போவீங்க. குடும்பத்துல இருந்த வாக்குவாதங்கள் குறைஞ்சு போகுமுங்க. சுப காரியங்கள் நடந்தேறுமுங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.



**மிதுனம்:** அன்புக்கு அடிமையான மிதுன ராசிக்காரர்களே... சுபகாரியங்கள் தடையில்லாம நடக்கப் போகுதுங்க. தொல்லை கொடுத்துக் கொண்டிருந்த கூட்டாளிங்க விலகிடுவாங்க. வீடு, மனைங்க வாங்க நல்ல நேரமுங்க. யாரிடமும் வாக்குவாதம் செய்யாதீங்க. கல்வி ஞானத்துல பேர் வாங்குவீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையை அதிகமாக்குமுங்க.



**கடகம்:** தைரியமான கடக ராசிக்காரர்களே... உங்க மனக்குழப்பம் தீர்ந்துடுமுங்க. பணக்கஷ்டம் எல்லாம் இருக்காது. எதிரிங்க தொல்லை தீருமுங்க. உங்க வார்த்தைக்கு 'பவர்' கூடும். ஆபரணச் சேர்க்கை உண்டுங்க. ராகு / கேது / சனி வழிபாடு சங்கடங்களைத் தீர்க்குமுங்க.



**சிம்மம்:** போராட்டக் குணம் நிறைந்த சிம்மராசிக்காரர்களே... வீடு / மனை வாங்க சூப்பரான நேரம். எதிரிகள் தொல்லை இனி இருக்காதுங்க. வியாபாரத்துல நல்ல லாபம் கொட்டும். தொழில இன்னும் விருத்திப் பண்ணப் போறீங்க. குடும்பத்துல சுப காரியப் பேச்சு எழும். நீண்ட காலமாக அச்சுறுத்திக்கொண்டே இருந்த பிரச்னை முடிவுக்கு வரும்.



**கன்னி:** தளராத மனம் கொண்ட கன்னி ராசிக்காரர்களே... பூர்வீகச் சொத்துகள் பாகப்பிரிவினை ஆகுமுங்க. திடீர் பிரபலம் ஆவீங்க. உடல் ஆரோக்கியம் நல்லா இருக்கும். வியாபாரம் சூடுபிடிக்கும். கடன் தொல்லைகள் தீருமுங்க. தொலை தூரத்திலிருந்து நல்ல செய்தி வரும்.



**துலாம்:** பேச்சு வல்லமை கொண்ட துலாம் ராசிக்காரர்களே... வேலையில மாற்றம் வரப்போகுதுங்க. வீட்டைக்கூட மாற்றப் போறீங்க. நண்பர்களைப் பிரியப் போறீங்க. காதல் கசக்குமுங்க. பூமி மூலம் ஆதாயம் கிட்டும். கடன் தொல்லைகள் கட்டுக்குள்ளே இருக்கும். ராகு / கேது / குரு வழிபாடு தீமையைக் குறைக்குமுங்க.
















**விருச்சிகம்:** நட்புக்குப் பெயர்போன விருச்சிக ராசிக்காரர்களே... உங்கள் 'வாக்கு' மேன்மையடையப் போகுது. புண்ணிய ஸ்தலம் சென்றுவரப் போறீங்க. திருமணப் பேச்சு கைகூடப் போகுதுங்க. நண்பரை விட்டுப் பிரியப் போறீங்க. புதிய தொழில் முயற்சியில இறங்கப்போறீங்க. சனி வழிபாடு செய்து வர நன்மை பெருகப் போகுது.

**தனுசு:** ஞானத்தால் சிறந்த தனுசு ராசிக்காரர்களே... வெளிநாடு போக அழைப்பு வரப் போகுது. இல்லற வாழ்க்கையில அடிக்கடி சண்டை சச்சரவுங்க வருமுங்க. தேவையில்லாம வாக்கு வாதம் செய்யாதீங்க. உடம்பைக் கொஞ்சம் கவனிச்சுக்குங்க. ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நன்மை அதிகரிக்கும்.

**மகரம்:** தெளிந்த சிந்தனை கொண்ட மகர ராசிக்காரர்களே... மன உளைச்சல் தீருமுங்க. பணக்கஷ்டம் இருக்காது. குடும்பத்துல பிரச்னைகள் தீருமுங்க. உத்தியோகத்துல இடமாற்றம் உண்டு. வியாபாரத்துல நல்ல ஏற்றம் உண்டுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மையை அதிகமாக்குமுங்க.

**கும்பம்:** பொறுமை நிரம்பிய கும்பராசிக்காரர்களே... சுப காரியங்கள் நீங்கள் நினைத்தபடி நடக்கப் போகுது. பணக்கஷ்டம் இருக்காதுங்க. பாக்கிகள் வசூலாகுமுங்க. உல்லாசப் பயணம் போவீங்க. உடல், மனம் நல்ல நிலையில் இருக்கும். சனி வழிபாடு இன்னும் நன்மையை அதிகப்படுத்தும்.

**மீனம்:** கஷ்டத்துக்குக் கலங்காத மீனராசிக்காரர்களே... உங்களுக்கு இட மாற்றம் ஏற்படப் போகுது. வேலைப் பளு அதிகரிக்கும். அதே நேரத்துல பணக் கஷ்டம் இருக்காது. நண்பர் வழியில பெரிய நன்மையைப் பெறப் போறீங்க. செலவுகளைக் கட்டுக்குள்ள வைத்துக் கொள்ளுங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையைத் தரும்.

**தஞ்சை பரத்வாஜ்**

# கங்குலி அவுட்... ஜாகிர்கான் குஷி..!

மக்களின் கோடைகாலப் பொழுதுகளை இதுநாள் வரைக்கும் சினிமாவும் சுற்றுலாவும்தான் சாப்பிட்டுக்கொண்டு இருந்தன. இப்போது கிரிக்கெட் தட்டிச் சென்றுவிட்டது. ஒவ்வொரு ஆட்டத்துக்கும் நிரம்பும் மைதானங்களே இதற்குச் சாட்சி.

ஐ.பி.எல். வெற்றி அடையுமா என்று ஆரம்பத்தில் நிறைய பேருக்குச் சந்தேகம் எழுந்தது. இந்தியாவை எட்டு துண்டுகளாக உடைத்து அணி அமைத்தால், அவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்று குறைகள் எழுந்தன. ஆனால், ரசிகர்கள் தெளிவாக இருக்கிறார்கள். நாற்பத்து நான்கு நாட்களுக்கு மட்டும் தங்களது ஏகோபித்த ஆதரவை மாநில அணிக்காக ஒதுக்கிவிட்டார்கள். இதனால்தான் யுவராஜ் சிங் விக்கெட் விழுகிறபோது சென்னை ரசிகர்களால் அதைக் கொண்டாட முடிகிறது. அதே சமயம், பெங்களூரிலும் சென்னையிலும் நடந்த ஆட்டங்களில் மைதானத்தில் திரளாக வந்திருந்த மக்கள் நடுநிலையோடு கிரிக்கெட்டை ரசித்தார்கள். ஆனால் கொல்கத்தா, மும்பையில் பிராந்திய உணர்வுகளே தலைதூக்கின. 'என் வாழ்க்கையில் இப்படி ஓர் அனுபவம் ஏற்பட்டதே கிடையாது. இந்தியாவில் எந்தப் பகுதிக்கு நான் சென்றாலும், அங்கு மக்கள் என் ஆட்டத்தைக் கொண்டாடி மகிழ்வார்கள். ஆனால், இன்று மும்பையில் நான் பவுண்டரி அடித்தபோது மைதானமே அமைதியில் மூழ்கியிருந்தது' என்கிறார் ராகுல் டிராவிட்!

எல்லா நாட்டு வீரர்களும் இதற்கு முன்னால் ஒன்றிணைந்து ஆடியிருக்கிறார்கள். வேர்ல்ட் லெவன் அணி, ஆசிய லெவன் அணி என்றெல்லாம் அணிகள் அமைக்கப்பட்டதுண்டு. ஆனால், அந்தச் சமயங்களில் எழுப்பப்பட்ட பெரிய குறை - அணியின் ஒற்றுமையின்மை. கடமைக்கு ஆடுவதுபோல தோற்றம் ஏற்பட்டது. இதனாலேயே வேர்ல்ட் லெவன் அணி என்கிற ஒரு நடைமுறை வழக்கொழிந்து போனது. ஆனால் ஐ.பி.எல்.லில் ஒற்றுமை வேற்றுமை என்று யாரும் பேச முடியாது. கோடிக்கணக்கில் பணம் இறைக்கப்பட்டுள்ளது. ஐந்து வருடம் ஐ.பி.எல்.லுக்காக ஆடினால் போதும். தலைமுறை தலைமுறையாக உட்கார்ந்து






சாப்பிடலாம். ஆனால், காசு வாங்கிக்கொண்டு சோபிக்காமல் போனால், மல்லையா, அம்பானி போன்றவர்கள் தங்கள் பணம் மைதானத்தில் விக்





கெட்டுகளாகவும் ரன்களாகவும் கரைவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

முதல் ஆட்டத்தில் பெங்களூர் மிக மோசமாக ஆடியது. மெக்குல்லம் அடித்த ஒவ்வொரு சிக்ஸருக்கும் ஷாருக்கான் ஸ்டைலாக நடனமாடிக்கொண்டிருந்த போது, பெங்களூர் அணியின் முதலாளி யான மல்லையா முகம் சிவந்து போயி ருந்தார். விளைவு அடுத்த ஆட்டத்தில் தெரிந்தது. முதல் ஆட்டத்தில் ஆடிய நான்கு ஆட்டக்காரர்கள் உடனடியாக வெளியேற்றப்பட்டார்கள். இந்திய அணியில் விளையாடும்போது மிக மோசமாக ஆடினால் யாரும் கேள்வி கேட்கமாட்டார்கள். அவுட் அஃப் ஃபார்ம் என்று ஒரு சால்ஜாப்பு கூறி, சம்பந்தப்பட்ட வீரருக்கு மேலும் மேலும் வாய்ப்புகள் அருளப்படும். இதற்கு வாசிம் ஜாஃபர் நல்ல உதாரணம். ஆனால் முதல் ஆட்டத்தில் கதைக்கு உதவாத ஜாஃபர் அடுத்த ஆட்டத்திலேயே தூக்கியடிக்கப் பட்டார்.

ஐ.பி.எல். ஆட்டங்களில் இது வரைக்கும் பார்த்திராத, இனிமேலும் பார்க்க முடியாத காட்சிகளெல்லாம் காணக்கிடைக்கின்றன. கங்குலியின் கேட்சைப் பிடித்த ஜாக் காலிஸைக் கட்டிக் கொள்கிறார் ஜாகிர் கான். ஆஸ்திரேலியாவில் எலியும் பூனையுமாக இருந்த இஷாந்தும் பாண்டிங்கும் அடிக்கடி மைதானத்தில் சில நொடிகள் ஆட்ட உத்திகள் பற்றி பேசுகின்றனர். முடிவாக இஷாந்த் தோளில் தட்டிக் கொடுத்து உற்சாகப் படுத்துகிறார் பாண்டிங்! சென்ற நூற் றாண்டில் இதுபோன்ற காட்சிகளைக் கனவில்கூட கண்டிருக்க முடியாது!

பி.கு. : நம் சுரணையுணர்வு எந் தளவுக்குப் பரிசோதிக்கப்படுகிறது என் பதற்கான சிறிய அடையாளம் - மேட்ச் நடக்கும் சமயத்தில் திணிக்கப்படும் டீ.வி. விளம்பரம். கிரிக்கெட் மேட்ச் காட்சியை ஓரமாகத் தள்ளிவிட்டு, இருக்கிற முக்கால் பங்கு ஸ்கிரீனில் வோடஃபோன் செல்ஃபோன் விளம் பரம் இரைச்சலான ஒலியுடன் காண் பிக்கப்படுகிறது. இதற்கு நடுவே ஒலிபரப்பாகும் கமென்டேட்டரின் பேச்சு, லைவான ஆட்டம் எல்லாம் அப்படியே காற்றில் கரைந்துபோகின் றன. எல்லா வேலைகளையும் துறந்து விட்டு டீ.வி. முன்னால் அமர்ந்திருக்கும் ரசிகனை, இதை விடவும் கேவலப் படுத்த முடியாது.

கண்ணன்

# அறை எண் 305-ல் கடவுள்!



'அடுத்தவனுக்கு அன்பு காட்டு எல்லோருமே கடவுள்தான்' என்பதைச் சிரிப்பும் கலிப்புமாகச் சொல்லியிருக்கிறார்கள். கடவுளாக வரும் பிரகாஷ்ராஜ் கலகலப்பான தன் பாத்திரத்தைக் கையாண்டிருக்கிறார். மொக்கை - ராகவாக சந்தானமும் கஞ்சா கருப்பும் அடுத்த இடத்துக்குத் தாவியிருக்கிறார்கள். நக்கல் ரகத்தைச் சேர்ந்த சந்தானத்தின் காமெடி, படம் முழுக்க விரவிக் கிடக்கிறது. மண் மணம் கமழும் கருப்பின் மொழி வளம், இடையிடையே வரும் சிரிப்புச் சிலம்பு. ஆரம்பத்தில் பொம்மையாக வந்தாலும் சந்தானம் பெண் கேட்டு வருமிடத்தில் மதுமிதா உயர்ந்து விடுகிறார். மெல்ல நடித்தும் ஜோதிர்மயி, வசனம் அதிகம் பேசாமலே நம்மில் நிறைகிறார்.

அதிகம் பேசப்பட வேண்டியவர் இயக்குநர் சிம்புதேவன். திருவல்லிக்கேணி மேன்ஷனை இன்ச் இன்ச் ஆகக் காட்டி, ஒவ்வொரு கேரக்டரையும் அழுத்தம் திருத்தமாக நம்முள் பதிய வைப்பது இதம். ராஜேஷுக்கும் பிரகாஷ்ராஜுக்கும் நடக்கும் கடவுள் பற்றிய வாதப் பிரதிவாதங்கள் சுவைக் சுவைக்கட்டிகள். மதுமிதாவின் விலைமாது விளக்கம், வி.எஸ்.ராகவனின் நிறை வாழ்வு, ஹனீபா தரும் ஜோதி ரகசியம், பாடிவிட்டே காசு கேட்கும் சிறுவர்களின் பிடிவாதம்... என்று படத்தில் நெக்குருக வைக்கும் காட்சிகள் நிறைய. கம்யூட்டர் கற்றுக்கொண்டு விட்டதாலேயே ஆபிரமாபிரமாய்ச் சம்பாதிக்கும், ஸாஃப்ட்வேர் 'சார்'களையும் நார் நாராய்க் கிழித்திருக்கிறார் இயக்குநர்.

சௌந்தரராஜனின் ஒளிப்பதிவில் நேர்மை இருக்கிறது. இரண்டு பாடல்களை இதமாய்த் தந்திருக்கிறார் வித்யாசாகர். 'குறையொன்றுமில்லை' பாட்டு வரிகள், சோர்ந்த மனதுக்கு உற்சாக டானிக். வாழ்க்கைக்குத் தேவையான பாடம் தந்த சிம்புதேவன், இன்னும்கூட சில கமர்ஷியல் அம்சங்களையும் குழைத்துத் தந்திருக்கலாம். கேலக்ஸி பெட்டியை அபகரித்த பின் வரும் சந்தான-கருப்பு சம்பவங்கள், சுவாரஸ்யக் குறைவு.

— ஆல்ஃபர்டோ







கோயில்களில், பிரம்மோத்ஸவம் பெருந்திருவிழா ஆண்டுக்கு ஒருமுறை பத்து நாட்கள் நடைபெறும். இந்த உத்ஸவத்தில் பிரதான மூர்த்தியாய் விளங்கும் தெய்வத் திருவுருவத்தை, வண்ணமும் வனப்பும் கொண்ட மலர் மாலைகளாலும், கண்ணைப் பறிக்கும் மணிகள் இழைத்த ஆபரணங்களாலும் அலங்கரித்து, கோயிலைச் சுற்றியுள்ள மாடவீதிகளில் காலையிலும் மாலையிலும் எழுந்தருளுவிப்பார்கள். விஷ்ணு ஆலயமாக இருந்தால், பூதேவி ஸ்ரீதேவி சமேதராய் அவர் எழுந்தருளுவார். சிவாலயத் திருவிழாக்களில், சிவபெருமான் சோமாஸ்கந்த மூர்த்தியாய் எழுந்தருளுகையில், அவரது பரிவாரங்களான அம்பிகை, விநாயகர், சுப்ரமணியர், சண்டிகேஸ்வரர் ஆகியோரும் உலா வருவர்.

பெரும்பாலும் விநாயகர் மூஷிக வாகனத்திலும், சுப்ரமண்யர் மயில் வாகனத்திலும், சண்டிகேசுவரர் ரிஷப வாகனத்திலும் எழுந்தருளுவார்கள். ஆனால், சுவாமியும் அம்பாளும் நாளுக்கொரு வாகனத்தில் எழுந்தருளி, விதவிதமான கோலங்களில் நமக்குக் காட்சி தருவார்கள். கோயிலில் பிரம்மோத்ஸவத்துக்காகக் கொடி ஏற்றிவிட்டால், மக்கள் ஊர் எல்லையைத் தாண்டக் கூடாது என்பது மரபு. வெளியூர்களிலிருந்தும் பக்தர்கள் ஆவலுடன் திரண்டு வருவார்கள். இன்னின்ன வாகனத்தில் சுவாமியைத் தரிசித்தால், இன்னின்ன பலன்கள் கிடைக்கும் என்று மக்கள் ஆழமாக நம்பினார்கள்.

சிவ பெருமானுக்குரிய வாகனங்களில் சூர்யபிரபை, சந்திரபிரபை, அதிகார நந்தி, பூத வாகனம், ரிஷப வாகனம், யானை வாகனம், கைலாச வாகனம் ஆகியவை முக்கியமானவை. யம வாகனம், நாக வாகனம், குதிரை வாகனம், புருஷாமிருகம், யாளி வாகனம் ஆகியவை சில முக்கிய

# வணக்கத்துக்குரிய வாகனங்கள்!

த.கி. நீலகண்டன்

## வாகனங்களும்... பயன்களும்...

| | |
|---|---|
| சூர்ய பிரபை | - பூர்விகச் சொத்துக்கள் அடைய |
| சந்திர பிரபை | - மன அமைதி, நோயற்ற வாழ்வு |
| அதிகார நந்தி | - ஞானம் |
| பூத வாகனம் | - மகிழ்ச்சியான வாழ்வு |
| ரிஷப வாகனம் | - புத்திர பாக்கியம் |
| யானை வாகனம் | - உடல் வலிமை, செல்வச் செழிப்பு |
| கைலாச வாகனம் | - வீடுபேறு |

சிவஸ்தலங்களில் விசேஷமானவை. இந்த வாகனங்கள் கோயிலின் தலபுராணத்தோடு தொடர்புள்ளவை. வாகனங்களும் அவற்றைத் தரிசிப்பதால் ஏற்படும் பலன்களையும் அறிய பெட்டிச் செய்தி காண்க!

**சூர்ய பிரபை - சந்திர பிரபை:** உத்ஸவத்தின் முதல் இரண்டு நாட்களில் இந்த வாகனங்களில் சுவாமி எழுந்தருளுவார். காலை வேளையில் தங்கமயமான சூர்ய பிரபை; இரவில் வெள்ளி சந்திர பிரபை. சூர்ய பிரபையில் சுவாமியைச் செம்பட்டு உடுத்தியும், சந்திர பிரபையில் வெண்பட்டு உடுத்தியும் அலங்கரிப்பது வழக்கம். சூரியனுக்கும் சந்திரனுக்கும் அவற்றின் ஒளியைத் தருவது, சிவபெருமானே என்கிற தத்துவத்தின் அடிப்படையில் இந்த வாகனங்கள் அமைகின்றன. சூரியனும் சந்திரனும் பெருமானின் அஷ்டமூர்த்தங்களில் அடங்கும்.



**அதிகார நந்தி:** காளை முகத்துடனும், மானுட தேகத்துடனும் விளங்கும் வாகனமே அதிகார நந்தி. கயிலையில் சுவாமியின் முன் னிலையில் ஒழுங்குமுறையைப் பரிபாலிப்பவர் இவர். இவருக்கு நான்கு கரங்கள். மேலிரண்டு கைகளில் மானும் மழுவும் ஏந்தி, தம் தோள் மீது அமர்ந்திருக்கும் பெருமானின் பாதங்கள் இரண்டையும் தம் உள்ளங்கையில் தாங்கும் பாவனையில், கீழ் இரண்டு கரங்கள் அமைந்திருக்கும். ஒரு காலை மடித்து ஊன்றி இன்னொரு காலை மண்டியிட்டுக் கம்பீரமாக நிமிர்ந்த தோளும், மார்பும் விளங்க, கலையழகு மிளிரும் வாகனம் இது. கண்களில் பெருமிதமும், விறைத்த காதுகளில் ஆர்வமும், குழைத்த நாக்கில் பாசமும் பொங்கும் அற்புதக் கலைவடிவம்.



**பிரம்மோத்ஸவத்துக்காகக் கொடி ஏற்றிவிட்டால் மக்கள் ஊர் எல்லையைத் தாண்டக்கூடாது என்பது மரபு.**

**பூத வாகனம்:** பூத கணங்களுக்கு அதிபதியாய் விளங்கும் பெருமான், பெருத்த உடலும் விரித்த சடையும், குட்டை வடிவமும், பருத்தத் தொந்தியும் உடைய பூத வாகனத்தில் எழுந்தருளுகிறார். உடன் வரும் அம்பிகை பூதசி என்கிற பெண் பூதத்தின் மீதும், முருகப் பெருமான் தாரககாசுரன் வாகனத்திலும் ஆரோகணித்து பவனி வருவார்கள்.

**ரிஷப வாகனம்:** சிவாலய விழாக்களில் ரிஷப வாகனம் மிக முக்கியமானது. பெரும்பாலும் நள்ளிரவு நேரத்தில், சுவாமி எழுந்தருளும்போது சாம்பிராணி குங்கிலியம் ஆகிய வாசனைப்புகை சூழ்ந்திருக்க, ஆடை ஆபரணங்கள் மின்ன, இது பூலோகமா! கைலாயமா! என்கிற சந்தேகம் வந்துவிடும். அன்று விநாயகப் பெருமான் தவிர மற்ற அனைத்துப் பரிவாரங்களும் ரிஷப வாகனத்திலேயே உலா வருவர்.

**யானை வாகனம்:** விநாயகரும் சுப்ரமண்யரும், தும்பிக்கையை ஆட்டிக்கொண்டு வரும் குறும்புக்காரக் குட்டி யானைகளின் மீதமர்ந்து உலா வருவார்கள்.

**கைலாச வாகனம்:** இராவணன் கயிலை மலையைத் தூக்க முற்பட்டுக் கர்வபங்கம் அடைந்த புராணக் கதையை நினைவுபடுத்தும் வகையில், கைலாச வாகனம் அமைந்திருக்கிறது. இருபது கைகளில் இரண்டு கைகள் மலையடியில் மாட்டிக்கொண்டிருக்க, இரண்டு கைகளில் வீணை ஏந்தி சாமகானம் இசைக்க, மற்ற கைகளில் ஆயுதங்கள் ஏந்தி, ஒரு காலை மண்டியிட்டு, இன்னொரு காலை மடித்து ஊன்றி, எப்படியாவது தப்பி பிழைத்து விட மாட்டோமா என்று விழி பிதுங்கி நிற்கும் இராவணனின் உருவம் கற்பனைச் சிறப்புக்கு மற்றும் ஓர் உன்னதமான உதாரணம்.





"சாம்பார்ல பாட்டி இருக்காங்களா, என்னடா உளர்றே?"

"நீதானேம்மா சொல்லுவே, பாட்டி சரியான 'மொளகா'ன்னு!"



"எதுக்கு உன் ஜூனியரை, 'சீனி'யர்ன்னு சொல்றே?"

"அந்த அளவுக்கு அவர் உடம்புல 'சர்க்கரை' இருக்குதே!"

- வெ.சீதாராமன்

இந்த வீட்டுக்குப் புதுசா குடி வந்திருக்கிறது ஓர் அரசியல்வாதின்னு எப்படிச் சொல்றே?

நேத்து அந்த அம்மா, 'இந்தா இலவச சாப்பாடு'ன்னு சொல்லிச் சோறு போட்டாங்களே!

- லெ.நா. சிவக்குமார்





''யார் என்ன சொன்னாலும் சட்டுன்னு 'ஆமா' போடக் கூடாது... தெரியுமா?''

''ஆமா... ஆமா!''

– என்.எஸ்.பால சுப்பிரமணியன்

---

''என் மனைவி மௌனமாக இருக்கும்போது பார்த்தால் பாவமாக இருக்கும்.''

''பேசும்போது பார்த்தால்..?''

''அகம்பாவமாக இருக்கும்!''

– பெ.கலாசாமி

''எனக்கு என் மனைவி தெய்வம் மாதிரி.''

''எப்படி?''

''தினமும் ஏதாவது ஒரு பிரச்னையை உண்டு பண்ணிச் சோதிச்சுகிட்டே இருப்பா.''

– ஆ. விஜயலக்ஷ்மி

---

''டாக்டர் பஸ்ல போகும்போது ஒரே தூக்கமா வருது.''

''சரி... கொஞ்ச நேரம் அப்படியே தூங்க வேண்டியதுதானே.''

''நான் தூங்கினா அப்புறம் யார் பஸ் ஓட்டறது?''

– எம்.சரவணன்





# இது இலவச சாப்பாடு!




கம்ப்யூட்டர் தோன்றி இன்டர்நெட் தோன்றாத முப்பது வருடத்துக்கு முற்பட்ட பழைய காலம் இருந்ததே? அப்போது நம்ம பணத்தை அக்கௌண்டில் போடவோ எடுக்கவோ, வங்கிக்குப் போய்வந்த அனுபவம் பற்றிப் பெரிசுகளைக் கொஞ்சம் விசாரித்துப் பாருங்கள். கதை கதையாய் நீளும்.

நாளடைவில் ஏ.டி.எம். என்ற தானியங்கிக் காசு வழங்கும் யந்திரங்கள் புழக்கத்தில் வந்தன. அக்கௌண்ட் ஆயிரம் இருந்தும் ஏ.டி.எம். கார்ட் வசதிகள் இருந்து என்ன? வருமான வரி, வீட்டு வரி செலுத்த, பாஸ்புக்கில் கணக்கு விவரம் பதிய... வங்கி வாசலை மிதிக்காமல் இருக்க முடியாது. உங்கள் வங்கி இன்டர்நெட் உபயத்தில் இதற்கும் முற்றுப்புள்ளி வைத்தது. உங்கள் வங்கி இன்டர்நெட் சேவை அளிப்பது என்றால் ஹாயாக வீட்டில் லுங்கி, நைட்டி இத்யாதி அலங்காரத்தோடு சொந்த கம்ப்யூட்டர் முன்னால் உட்கார்ந்து, இன்டர்நெட் மூலம் வங்கியின் இணையதளம் போனால் போதும். பாஸ்வேர்ட் சரிபார்ப்பு போன்ற பாதுகாப்புச் சடங்குகள் வரிசைக் கிரமமாக நடந்தேறும்.

வீட்டுக்குள் வங்கியைக் கொண்டு வர டெக்னாலஜி செய்து கொடுக்கும் சௌகரியத்துக்குச் சில நேரங்களில் சில பேர் விபரீதமான விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. ஓய்வு பெற்ற ஒரு பேராசிரியர், இன்டர்நெட் வங்கிச் சேவை மூலம் கிட்டத்தட்ட ஏழு லட்சம் ரூபாய் இழந்தது சம்பந்திய செய்தி. இது போன்ற இன்டர்நெட் மோசடிகளில், கடந்த ஒரு வருடத்தில் மட்டும் உலகம் முழுக்க கிட்டத்தட்ட நாற்பது லட்சம் பேர் பாடுபட்டுச் சேர்த்து வைத்த பணத்தை இழந்திருக்கிறார்கள்.

எப்படி நடக்கும் திருட்டு! நீங்கள் இன்டர்நெட்டில் உலா வரும்போது, தூண்டிலில் மீன் சிக்குமா என்று ஏமாளிகளை எதிர்பார்த்துக் கொண்டு, உலகின் எங்கெல்லாமோ யாராரோ நெட்டில் காத்திருக்கிறார்கள். இதுவும் 'மீன் பிடிப்பது'தான். ஸ்பெல்லிங் கொஞ்சம் மாற்றி (phishing) பிஷ்ஷிங் என்றே அழைக்கப்படுகிறது. எப்படி நடக்கிறது இந்த எலக்ட்ரானிக் 'மீன் பிடித்தல்' மோசடி?

இன்டர்நெட் வைத்திருக்கும் உங்களுக்கு,



# இண்டர்நெட்



# கொள்ளை

ஈ-மெயில் விலாசம் இல்லாமல் போகாதே? அந்த மின்னஞ்சலைத் திறந்ததும் நீங்கள் கணக்கு வைத்திருக்கும் வங்கியிலிருந்து ஒரு கடிதம் வந்திருக்கக்கூடும். 'உங்க கணக்கு விவரங்களை மறுபடியும் சரி பார்க்கணும், பாஸ்வேர்ட், கணக்கு எண் இதையெல்லாம் வங்கி இணையத் தளத் துக்கு வந்து பதிஞ்சுட்டுப் போங்க. ஒரு நிமிடம்தான் பிடிக்கும். கஷ்டப்பட்டு இன்டர்நெட் அட்ரஸை டைப் அடிக்க வேணாம். பக்கத்திலேயே கொடுத்திருக் கோம். அந்த இணைப்பிலே மௌஸ் வச்சுச் சொடுக்குங்க போதும்.'

அட, நம்ம வங்கி கேட்கிறபோது சொல் லாம இருக்கலாமா என்று நீங்கள் மௌஸை அழுத்தினால், போய்ச் சேரும் இடம் உங்கள் வங்கியின் இணைய தளமாக இருக்காது. அசலை அப்படியே நகல் எடுத்து அதே படிக்கு முத்திரை, படம் எல்லாம் போட்ட போலி இன்டர்நெட் சைட் அது! பாஸ் வேர்ட், அக்கவுண்ட் நம்பர் என்று நீங்கள் பதியும் எல்லாத் தகவலும் அந்தப் போலி சைட் மூலம் மோசடிப் பேர்வழிக்குப் போய்ச்சேர, கணக்கில் வைத்திருக்கும் பணம் உடனடி அம்பேல்.

இந்த மாய மின்-மீன் வேட்டையை எப் படித் தடுப்பது? ரொம்ப ரொம்ப சிம்பிள்.

உலகத்தில் இருக்கும் எந்த வங்கியும், ஈ-மெயில் அனுப்பி, 'உங்கள் கணக்கு பாஸ்வேர்ட் மற்ற தகவல்களைச் சரிபார்க்க வேண்டும் என்று கேட்காது. உங்க பாஸ் வேர்ட் உங்களோடது மட்டும்தான். ரகசியம் பரம ரகசியம். அப்புறம் 'விவரம் பதியா விட்டால் கணக்கை முடக்குவோம்' என்ற பயமுறுத்தலும் வங்கியிலிருந்து வராது. இல்லையா, வங்கிக் கிளையைத் தொலை பேசியில் கூப்பிட்டு 'நீங்க அனுப்பிய ஈமெயிலா?' என்று விசாரியுங்கள். 'இல்லை, இல்லை, இல்லவே இல்லை' என்று ஈரோட்டுப் பதில் வரும். ●

## வரதட்சணை

முதலிரவு. புது மனைவி சுமிதாவிற்காகக் கனவுகளோடு காத்திருந்தான் பிரபாகரன்.

சுமி... என் சுமி. வரதட்சணையோ, பணம், நகையோ கேட்காத என்னை, உனக்கு ரொம்பப் பிடித்துப் போயிருக்கும். உள்ளே சுமிதா பால் சொம்போடு நுழைந் தாள். பிரபாகரன் அவள் கரம் பற்றிக் கட்டிலில் அமர வைத்தான். அவள் 'உம்' என்றிருந்தாள்.

"என்னைப் பிடிக்கலையா?''

"பிடிச்சிருக்கு'' முதல் தடவையாய்ப் பேசினாள்.

"அப்புறம் ஏன் ஒரு மாதிரி...?''

"நீங்க வரதட்சணை கேட்காததுதான் பிடிக்கலை. என் அக்கா புருஷன் என்னென்ன வரதட்சணை கேட்டு வாங்கினார் தெரியுமா? நீங்க வரதட்சணை கேட்காததால ஒரேயொரு சங்கிலி மட்டும்தான் எனக்குக் கிடைச்சது.''

'திக்' பிரமையோடு அவளையே பார்த்தான் பிரபாகரன்.

– ஆர்.ஜனனி பார்கவி

# மின்னல்

"என்ன சமையல்டி இது? இதை மனுஷன் சாப்பிடுவானா?'' வாயிலிருந்த சாப்பாட்டைக் கோபமாக வெளியே துப்பினான் கதிர்.

"ஹும்... சாம்பார்ல ஏகப்பட்ட உப்பு. பொறியல்ல காரம் வாய்ல வைக்க முடியலை. ரசம் உப்புச் சப்பில்லாம இருக்கு. போதாக்குறைக்குச் சாதம் பாரு எப்படிக் குழைஞ்சு போய் இருக்கு...'' உச்சபட்ச கோபம்.

"ஸாரிங்க... இன்னைக்கு ஒரு நாள் மட்டும் அட்ஜஸ்ட் பண்ணிச் சாப்பிட்டுக்கோங்க. தெரியாம இப்படிச் சமைச்சுட்டேன்'' என்றாள் விமலா.

## சமையல்



"நீங்க ஆஃபீஸ்ல இருந்து வர்றதுக்கு லேட் ஆயிடுச்சு. ஆஃபீஸ்ல இருந்து அலுப்பா வருவீங்க. வந்து சமைக்கக் கஷ்டமா இருக்குமேன்னு தான் நான் சமைச்சேன். இனிமே எவ்வளவு லேட் ஆனாலும் சரி. நான் சமையல் அறை பக்கமே போகமாட்டேன். வழக்கப்படி நீங்களே வந்து சமைச்சுடுங்க... என்ன'' கெஞ்சல் + கொஞ்சலாகச் சொன்னாள் விமலா.

– கே.ஆனந்தன்

"எனக்கு ஒரு முடிவைச் சொல்லிட்டுப் போங்க" சீறினாள் சாரதா.

"இதோ பாரு... எங்க அம்மா சொன்னா சொன்னதுதான். எதிர்த்துப் பேசாம சொல்றதைக் கேட்டு நட. அப்புறம் உன் இஷ்டம்" என்றவன் வெளியேறினான். 'சே... என்ன மனுஷன் இவன் புரிந்து கொள்ள மாட்டேன்'ங்கறானே சலிப்பாக இருந்தது சாரதாவுக்கு.

மாலையில் ஆஃபீஸ் முடித்து வந்த ராகவன், கைப்பையைத் திறந்து நகைப் பெட்டியை எடுத்து அம்மாவிடம் கொடுத்தான். அழகான நெக்லஸ். ஐம்பதாயிரம். பார்வதம் அம்மாள் சிரிப்புடன் வாங்கினாள்.

"இந்தாம்மா சாரதா. இதை வாங்கிக்கோ; வீணா அடம் பண்ணாதே. அவன் தங்கச்சிக்குக் கல்யாணம் பண்ண அவனுக்குத் தெரியும். நீயும் கல்யாணம் ஆகி வந்து, உனக்குன்னு ஒண்ணுமே கேக்கலை. இப்ப ஏதோ போனஸா பணம் வந்துச்சுன்னு சொன்னான். நான்தான் உனக்கு வாங்கித் தரச் சொன்னேன். மறுக்காம வாங்கிக் கோடியம்மா" என்றபடி சாரதாவின் கைகளில் கொடுத்தாள்.

– சு.மோகன்




# கதைகள்

தந்தையின் திவசம் முடிந்ததும் மனைவியிடம் சொன்னான் ராகவன்.

"ஜானகி! எனக்கும் முரளிக்கும் அப்பாவோட பிரசாதம் கொடு."

தட்டுகளில் வைத்திருந்த தேன் குழல், அதிரசம், எள்ளுருண்டை இவற்றில் ஒவ்வொன்றை எடுத்து, புருஷனுக்கும் மகனுக்கும் கொடுத்தாள் ஜானகி. தம் உள்ளங்கைகள் புடைத்துக்கொள்ளும் அளவுக்குப் பட்சணங்களைப் பெற்றுக்கொண்ட முரளி, தந்தையைத் தீர்க்கமாய்ப் பார்த்தான்.

"அப்பா, தாத்தா உயிரோடிருக்கும்போது பி.பி., சுகர், கொலஸ்ட்ரால் இதெல்லாம் இருக்குன்னு சொல்லி, வாய்க்கு ருசியா எதுவும் பண்ணிப் போடலை. இப்போ மட்டும் விதம்விதமாகச் செஞ்சு படைக்கிறோம். இதையெல்லாம் ஒத்துக்குவாரா தாத்தா?"

மகன் கேள்விக்குப் என்ன சொல்வதென தெரியாமல் விழித்து நின்றான் ராகவன்.

– வி.கே.லக்ஷ்மிநாராயணன்



### திருடவும் திறமை வேண்டும்

ஜெர்மனியில், காணக்கிடைக்காத பழைய காலத்து அரிய நாணயங்களை ஒரு வங்கி ஊழியர் சேகரித்து வருகிறார். அவற்றின் மதிப்பு ஐம்பதாயிரம் யூரோவைத் தாண்டுமாம். திடீரென்று ஒரு நாள் அத்தனை நாணயங்களையும் காணவில்லை. போலீஸில் புகார் கொடுத்தும் பலனில்லை. மூன்று நாட்கள் வங்கிக்குப் போன அந்த ஊழியருக்கு,



### இப்படியும் ஒரு மனிதர்

ஸ்பைடர்மேன் படத்தில், பிரமாண்டமான கட்டிடத்தில் சர்வசாதாரணமாகத் தாவிக் குதிக்கும் நாயகனைப் பார்த்திருப்பீர்கள். பிரான்ஸ் நாட்டின் ஆலன் ராபர்ட்டும் அப்படிப்பட்ட ஆசாமிதான்.

நாற்பத்தைந்து வயது மனிதரான ராபர்ட், சமீபத்தில் ஹாங்காங்கிலுள்ள 46 அடுக்கு ஹோட்டல் கட்டிடம் ஒன்றின் மீது ஏறி அசத்தியிருக்கிறார். போலீஸ்காரர்கள் ஆளைப் பிடித்தாலும், கேஸ் போடாமல் விட்டுவிட்டார்கள். காரணம், 'பூமி வெப்பமடைவதை எதிர்த்தே இதை நான் செய்கிறேன்' என்று ராபர்ட் சொன்னது தான்.

*(கை-கால் வித்தை காட்டினாலும் வாயிருந்தால்தான் பிழைக்க முடியும்!)*



# கலர் மாறும் காதல்!

நம்ம ஊரில், பிப்ரவரி 14 என்றாலே கொண்டாட்டம்தான். தென்கொரியா நாட்டில் மார்ச் 14, ஏப்ரல் 14 என்று நிறைய பதினாங்குகளுக்குக் கொண்டாட்டம் தொடர்கிறது.

பிப்ரவரி 14ல் காதலி காதலனுக்குப் பரிசளிப்பதும், மார்ச் 14ல் காதலன் காதலிக்குப் பரிசளிப்பதும் தென்கொரிய நடைமுறை. இதற்கு 'வெள்ளை தினம்' என்று பெயர்.

ஏப்ரல் 14 கொண்டாட்டத்துக்குக் 'கறுப்பு தினம்' என்று பெயர். இதில் காதலர்களுக்கு 'நோ என்ட்ரி'. எல்லா 'சிங்கிள்'களும் ஒன்றாய்ச் சேர்ந்து, கொஞ்சம் வருத்தத்தோடு கொண்டாடுகிற விழா இது. நூடுல்ஸ் சாப்பிடும் போட்டிதான் இவ்விழாவின் முக்கிய அம்சம். வெற்றிபெற்றவர்களுக்கு தியேட்டரில் படம்பார்க்க ஒரு சிங்கிள் டிக்கெட் தரப்படும்!

ஓர் இன்ப அதிர்ச்சி காத்திருந்தது. களவுபோன நாணயங்களோடு ஒரு கஸ்டமர் காத்திருந்தார். என்னவென்று விசாரித்தால், பத்திரமாக இந்த நாணயங்களை, பேங்க் லாக்கரில் வைத்துப் பாது காக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.

நகைக்குப் பதிலாக இப்போது அந்த கஸ்டமர்தான் 'லாக்கரில்' இருக்கிறார்.

*(ஒளியத் தெரியாதவன் போலீஸ் காலனிக்குள் நுழைந்த கதைதான்.)*

இருந்தாலும், 'சிங்கம் சிங்கிளாத்தான் இருக்கும்' என்று யாரும் வீண் ஜம்பம் அடிப்பதில்லை. ஏனெனில், அடுத்து வருவது 'பச்சை தின'மான ஆகஸ்ட் 14. அன்று காதலர்கள் கைகோர்த்தபடி பசும் புல்வெளியில் ஜாலியாக நடை போடலாமாம்.

**(ஏன் இப்படி நாள் கிழமையெல்லாம் ஒதுக்கி டயத்தை வீணடிக்கணும்?)**



# உலகே மாயம்!



## ஆதிமொழி

மண்ணில் புதைந்துகிடந்த, ஆதி கால நியாண்டர்தால் மனிதனின் எச்ச சொச்சங்கள் கையில் கிடைத்ததுதான் போதும். இலைவரைவு அறிஞர்கள் அதை வைத்து அக்குவேறு ஆணிவேறாக அலசிக் கொண்டிருக்கிறார்கள். ஃப்ளோரிடா அட்லாண்டிக் பல்கலைக் கழகத்தில், நியாண்டர்தாலைப் போலவே ஒரு டம்மி மனிதனை உருவாக்கி, அதைப் டப்பிங் 'பேச'வைத்து ஆராய்ச்சி முடிவை வெளியிட்டிருக்கிறார்கள்.

நியாண்டர்தால் மனிதன், வாய் திறந்து பேசியிருக்கிறான் என்பதுதான் அந்த ஆராய்ச்சியின் சாரம். ஆனால், நம்மைப் போல் ஸ்டைலாக அவனுக்குப் பேச வரவில்லை. ஏதோ கொஞ்சம் திக்கித் திணறித்தான் பேசியிருக்கிறான்.

*(அப்புறமென்ன, 'அகர முதல எழுத்தெல்லாம் அறிய வைத்தாய் தேவி' என்றா நியாண்டர்தால் பாடுவான்?)*

– ஸாந்த்



# பார்த்திபன் கனவு

## 36. பலிபீடம்

**கா**ட்டாற்றங்கரையோடு மேற்கு நோக்கி இரண்டு நாழிகை வழி தூரம் போனதும், குள்ளன் தென்புறமாகத் திரும்பி அடர்ந்த காட்டுக்குள் புகுந்து சென்றான். காட்டைத் தாண்டியதும், அப்பால் ஒரு பெரிய மேடு இருந்தது. அந்த மேட்டின் மேல் குள்ளன் வெகு வாகவமாக ஏறினான். குதிரைகள் ஏறுவதற்குக் கொஞ்சம் சிரமப்பட்டன. மேட்டின் மேல் அது ஒரு ஏரிக்கரை என்று தெரிந்தது. "அதோ!" என்று குள்ளன் சுட்டிக்காட்டிய இடத்தை விக்கிரமனும் பொன்னனும் நோக்கினார்கள். மொட்டை மொட்டையான மலைக் குன்றுகளும், அவற்றின் அடிவாரத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த குட்டையான மரங்களும், நூற்றுக்கணக்கான தீவர்த்திகளின் வெளிச்சத்தில், அரைகுறையாகத் தெரிந்தன. அந்த மலையடிவாரக் காட்டில் நடமாடிக் கொண்டிருந்த உருவங்கள், மனிதர்களாய்த்தானிருக்க வேண்டும் என்றாலும் தூரத்திலிருந்து பார்க்கும்போது, பேய் பிசாசுகள் தான் நடமாடுகின்றனவோ என்று எண்ணும்படியிருந்தது. பயங்கரத்தை அதிமாக்குவதற்கு அந்த இடத்திலிருந்து தாரை தப் பட்டைகளின் முழக்கம், உடுக்கு அடிக்கும் சப்தம் - இவையெல்லாம் கலந்து வந்து கொண்டிருந்தன.

விக்கிரமன், பொன்னன் இருவருக்குமே உள்ளுக்குள் திகிலாய்த்தானிருந்தது. ஆனாலும் அவர்கள் திகிலை வெளியே காட்டாமல், குள்ளனைப் பின்பற்றி ஏரிக் கரையோடு சென்றார்கள். குள்ளனுடைய நடைவேகம் இப்போது இன்னும் அதிகமாயிற்று. அவன் ஏரிக் கரையோடு சற்றுத் தூரம் போய் ஜலம் வறண்டிருந்த இடத்தில் இறங்கி, குறுக்கே ஏரியைக் கடந்து செல்லலானான். அவனைப் பின் தொடர்ந்து விக்கிரமனும் பொன்னனும்

குதிரைகளைச் செலுத்தினார்கள். குதிரைகளும் பீதி அடைந்திருந்தன என்பது அவற்றின் உடல் நடுக்கத்திலிருந்து தெரிய வந்தது.

இன்னொரு கால் நாழிகைக்கெல்லாம், அவர்கள் குன்றின் அடிவாரத்துக் காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே குதிரைகள் நடுக்கம் அதிகமானபடியால், விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மீதிருந்து இறங்கி அவற்றை மரத்தில் கட்டினார்கள்; பிறகு காட்டுக்குள் பிரவேசித்தார்கள்.

தீவர்த்திகளின் வெளிச்சத்தில், ஆங்காங்கே ஜனங்கள் ஆவேசம் வந்தது போல் ஆடுவதையும், சிலர் மஞ்சள் வஸ்திரம் தரித்துக் கண் மூடித் தியானத்தில் இருப்பதையும், சிலர் அடுப்பு மூட்டிப் பொங்கல் வைப்பதையும், இன்னும் சிலர் கத்திகளைப் பாறைகளில் தீட்டிக் கொண்டிருப்பதையும், சிலர் உடுக்கு அடிப்பதையும் பார்த்துக்கொண்டு போனார்கள். திடீரென்று மரங்கள் இல்லாத வெட்டவெளி தென்பட்டது. அந்த வெட்டவெளியின் வலதுபுறத்தில் ஒரு மொட்டைக் குன்று நின்றது. அதில் பயங்கரமான பெரிய காளியின் உருவம் செதுக்கப்பட்டு, அதன் மேல் பளபளப்பான வர்ணங்கள் பூசப்பட்டிருந்தன. காளியின் கண்கள் உருட்டி விழித்துப் பார்ப்பது போலவே தோற்றமளித்தன. அந்த உருவத்துக்குப் பக்கத்தில் சிலர் கும்பலாக நின்றார்கள். அவர்களுக்கு நடு மத்தியில் எல்லாரையும்விட உயர்ந்த ஆகிருதியுடனும், தலையில் செம்பட்டை மயிருடனும், கழுத்தில் கபால மாலையுடனும், நெற்றியில் செஞ்சந்தனமும் குங்குமமும் அப்பிக்கொண்டு, கபால பைரவர் நின்றார். அவருக்குப் பின்னால் ஒருவன் நின்று உடுக்கை அடித்துக் கொண்டிருந்தான். கபால பைரவருடைய கண்கள் அப்போது மூடியிருந்தன. அவருடைய வாய் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அவர் உடம்பு லேசாக முன்னும் பின்னும் ஆடிக் கொண்டிருந்தது.

மகா கபால பைரவர் நின்ற குன்றின் அடிவாரத்துக்கு எதிரே கொஞ்ச தூரத்தில், ஒரு சிறு பாறை இருந்தது. இயற்கையாகவே அது பலி பீடம் போல் அமைந்திருந்தது. அந்தப் பலி பீடத்தின் மேல் சிவனடியார் கையும் காலும் உடம்பும் கயிறுகளால் கட்டப்பட்டுக் கிடந்தார். அவருடைய கண்கள் நன்றாகத் திறந்திருந்தன. அங்குமிங்கும் அவருடைய கூரிய கண்கள் சுழன்றுசுழன்று பார்த்துக் கொண்டிருந்தன.

பலி பீடத்துக்குப் பக்கத்தில் ஒரு ராட்சத உருவம் கையிலே பிரம்மாண்டமான கத்தியுடன் ஆயத்தமாய் நின்றது. மகா கபால பைரவர் கண்ணைத் திறந்து பார்த்து, ஆக்ஞை இட வேண்டியதுதான். உடனே சிவனடியாரின் கழுத்தில் கத்தி விழுந்து விடச் சித்தமாயிருந்தது!

மேலே விவரித்த காட்சியையெல்லாம் விக்கிரமன், ஒரு நொடிப் பொழுதில் பார்த்துக் கொண்டான். பின்னர், ஒரு கணங்கூட அவன் தாமதிக்கவில்லை. கையில் கத்தியை எடுத்து வீசிக்கொண்டு, ஒரே பாய்ச்சலில் பலி பீடத்துக்கருகில் சென்றான். அந்த ராட்சத உருவத்தின் கையிலிருந்த கத்தியைத் தன் கத்தியினால் ஓங்கி அடிக்கவும், அது தூரத்தில் போய் விழுந்தது. உடனே, சிவனடியாரின் பக்கத்திலே வந்து நின்றுகொண்டான். தன்னைப் பின்தொடர்ந்து வந்திருந்த பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! ஏன் நிற்கிறாய் கட்டுகளை உடனே அவிழ்த்து விடு!'' என்றான்.

இவ்வளவும் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் நடந்துவிட்டது. சுற்றிலும் நின்றவர்கள் எல்லோரும், ''ஹா! ஹா!'' என்று கூச்சலிட்டதைக் கேட்டு கபால பைரவர் கண்விழித்துப் பார்த்தார். நிலைமை இன்னதென்று தெரிந்துகொண்டார். நிதானமாக நடந்து பலிபீடத்துக்கு அருகில் வந்து விக்கிரமனை உற்றுப் பார்த்தார்.

''ஹா ஹா ஹா!'' என்று அவர் நகைத்த ஒலி, குன்றுகளும் பாறைகளும் அடர்ந்த அந்த வனாந்திரப் பிரதேசமெல்லாம் பரவி எதிரொலி செய்தது.

அதைக் கேட்டவர்களுக்கெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாயிற்று.

இதற்குள் என்னவோ விசேஷம் நடக்கிறது என்று அறிந்து, நாலா பக்கத்திலிருந்தும் ஜனங்கள் ஓடி வந்து பலிபீடத்தைச் சூழ ஆரம்பித்தார்கள். அதைக் கண்ட மகா கபால பைரவர் தமது ஒற்றைக் கையைத் தூக்கி, ''ஹூம்!'' என்று கர்ஜனை செய்தார். அவ்வளவுதான் எல்லோரும் சட்டென்று விலகிச் சென்று, சற்றுத் தூரத்திலேயே நின்றார்கள். கீழே விழுந்த கத்தியை எடுத்துக்கொண்டு வந்த ராட்சதனும், அந்த ஹூங்காரத்துக்குக் கட்டுப்பட்டுத் தூரத்தில் நின்றான். பொன்னனும் நின்ற இடத்திலேயே செயலிழந்து நின்றான்.

மகா கபால பைரவர் விக்கிரமனை உற்றுப் பார்த்தவண்ணம் கூறினார்: ''பிள்ளாய்! நீ பார்த்திபசோழனின் மகன் விக்கிரமன் அல்லவா? தக்க சமயத்தில் நீ வந்து சேர்வாய் என்று காளிமாதா அருளியது உண்மையாயிற்று. மாதாவின் மகிமையே மகிமை!''

காந்த சக்தி பொருந்திய, அவருடைய சிவந்த கண்களின் பார்வையிலிருந்து விலகிக்கொள்ள முடியாதவனாய் விக்கிரமன் பிரமித்து நின்றான்.

''பிள்ளாய்! உன்னைத் தேடிக்கொண்டு நான் மாமல்லபுரத்துக்கு வந்தேன். அதற்குள் அந்தப் பித்தன் மாரப்பன் தலையிட்டுக் காரியத்தைக் கெடுத்துவிட்டான். ஆனாலும், இன்றிரவு நீ இங்கு எப்படியும் வருவாய் என்று எதிர்பார்த்தேன்!''

மந்திரத்தினால் கட்டுண்ட நாக சர்ப்பத்தின் நிலைமையிலிருந்து விக்கிரமன், விம்முகின்ற குரலில், ''நீர் யார்? எதற்காக என்னை எதிர்பார்த்தீர்?'' என்றான்.

''எதற்காகவா? இன்றிரவு இந்தத் தக்ஷிண பாரத தேசத்தில் காளிமாதாவின் சாம்ராஜ்யம் ஸ்தாபிதமாகப் போகிறது. இந்தச் சாம்ராஜ்யத்துக்கு உனக்கு இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமென்று மாதாவின் கட்டளை!'' என்றார் கபால பைரவர்.

அப்போது எங்கிருந்தோ 'களுக்' என்று பரிகாசச் சிரிப்பின் ஒலி எழுந்தது. கபால பைரவரும் விக்கிரமனும் உள்பட அங்கிருந்தவர்கள் அனைவரும், அக்கம் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள். ஆனால், சிரித்தது யார் என்பதைக் கண்டுபிடிக்க யாதொரு வழியும் தென்படவில்லை.

விக்கிரமனை அத்தனை நேரமும் கட்டியிருந்த மந்திர பாசமானது மேற்படி சிரிப்பின் ஒலியினால் அறுபட்டது. அவன் சிவனடியாரை ஒருமுறை பார்த்துவிட்டுத் திரும்பிக் கபால பைரவரை நேருக்கு நேர் நோக்கினான்.

''நீர் சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. எனக்கு இளவரசுப் பட்டம் கட்டப் போவதாகச் சொல்கிறீர். அது உண்மையானால், முதலில் நான் செய்யப் போகும் காரியத்துக்குக் குறுக்கே நிற்க வேண்டாம். இதோ இந்தப் பலி பீடத்தில் கட்டுண்டு கிடக்கும் பெரியார், எங்கள் குலத்தின் நண்பர். எனக்கும் என் அன்னைக்கும் எவ்வளவோ பரோபகாரம் செய்திருக்கிறார். அவரை விடுதலை செய்வது என் கடமை. என் கையில் கத்தியும் உடம்பில் உயிரும் இருக்கும்



வரையில் அவரைப் பலியிடுவதற்கு நான் விடமாட்டேன்!'' என்று சொல்லி விக்கிரமன் பலிபீடத்தை அணுகி, சிவனடியாரின் கட்டுக்களை வெட்டிவிட யத்தனித்தான்.

''நில்!'' என்று பெரிய கர்ஜனை செய்தார் கபால பைரவர். அஞ்சா நெஞ்சங் கொண்ட விக்கிரமனைக்கூட அந்தக் கர்ஜனை சிறிது கலங்கச் செய்து விட்டது. அவன் துணுக்குற்று ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றான். சிவனடியாரின் கட்டுக்களை வெட்டுவதற்காக அவன் நீட்டிய கத்தி நீட்டியபடியே இருந்தது.

கபால பைரவர் மறுபடியும் உரத்த குரலில், ''பிள்ளாய் விக்கிரமா! இந்தப் போலிச் சிவனடியார் - இந்த வஞ்சக வேஷதாரி - இந்தப் பொய் ஜடாமகுடதாரி யார் என்று அறிந்தால், இவ்விதம் சொல்ல மாட்டாய்! இவரைக் காப்பாற்றுவதற்கு இவ்வளவு முனைந்து நிற்க மாட்டாய்!'' என்றார்.

அவருடைய குரலில் தொனித்த ஆத்திரமும் அழுத்தமும், விக்கிரமனைத் திகைப் படையச் செய்தன. சிவனடியார் பல்லவ ராஜ்யத்தின் ஒற்றர் தலைவன் என்று தான் முன்னமே சந்தேகித்ததும் அவனுக்கு நினைவு வந்தது.

கபால பைரவர் மீண்டும், ''இந்த வேஷதாரியையே கேள், 'நீ யார்?' என்று; தைரியமிருந்தால் சொல்லட்டும்!''என்று அடித்தொண்டையினால் கர்ஜனை செய்தார்.

விக்கிரமன் சிவனடியாரைப் பார்த்தான். அவருடைய முகத்தில் புன்னகை தவழ்வதைக் கண்டான். அதே சமயத்தில், ''விக்கிரமா! கபால மாலையணிந்த இந்த வஞ்சக வேஷதாரி யார் என்று முதலில் கேள்; தைரியமிருந்தால் சொல்லட்டும்!'' என்று இடிமுழக்கம் போன்ற ஒரு குரல் கேட்டது. இவ்வாறு கேட்டுக்கொண்டு, பக்கத்திலிருந்த பாறையின் மறைவிலிருந்து ஓர் உருவம் வெளிப்பட்டது. அங்கிருந்தவர்கள் அத்தனை பேருடைய கண்களும் அந்த உருவத்தின் மேல் விழுந்தன. தீவர்த்தி வெளிச்சம் அந்த முகத்தில் விழுந்தபோது, ''ஆ''என்ற வியப்பொலி ஏககாலத்தில் அநேகருடைய வாயிலிருந்து எழுந்தது.

விபூதி ருத்திராட்சமணிந்து, முகத்தில் ஞான ஒளி வீசத் தோன்றிய அப்பெரியாரைப் பார்த்ததும் விக்கிரமனுக்கு என்றுமில்லாத பயபக்தி உண்டாயிற்று.

வந்தவர் வேறு யாருமில்லை. பல்லவ சாம்ராஜ்யத்தின் பழைய சேனாதிபதியும், வாதாபிகொண்ட மகாவீரருமான சிறுத் தொண்டர்தான்.

## 37. நீலகேசி

**பா**றை மறைவிலிருந்து சிறுத் தொண்டர் வெளிப்பட்ட சில விநாடிகளுக்கெல்லாம் இன்னும் சில அதிசயங்கள் அங்கே நிகழ்ந்தன. பாறைகளின் பின்னாலிருந்தும் மரங்களின் மறைவிலிருந்தும், இன்னும் எங்கிருந்துதான் வந்தார்கள் என்று சொல்ல முடியாத படியும், இந்திர ஜாலத்தினால் நிகழ்வது போல், திடீர் திடீரென்று ஆயுதபாணிகளான போர் வீரர்கள் அங்கே தோன்றிக் கொண்டிருந்தார்கள். இதைவிடப் பெரிய மகேந்திர ஜாலவித்தை ஒன்றும் அங்கே நடந்தது. பலிபீடத்தில் கட்டுண்டு கிடந்த சிவனடியார், எப்படியோ திடீரென்று அக்கட்டுக்களிலிருந்து விடுபட்டு எழுந்து பலிபீடத்திலிருந்து கீழே குதித்தார்.

இதற்கிடையில், சிறுத்தொண்டர் நேரே மகா கபால பைரவர் நின்ற இடத்தை

அதோ! என்று குள்ளன் சுட்டிக்காட்டிய திசையில் விக்ரமனும் பொன்னனும் நோக்கினார்கள்.



நோக்கி வந்துகொண்டிருந்தார்.
பைரவரின் முகத்தில் தோன்றிய
சிறுத்தொண்டர் அருகில் நெருங்க
மாயிற்று. அவருடைய உடம்பெல்ல
தொண்டர் அவருடைய சமீபத்தில்
ஏறிட்டுப் பார்த்து, "ஓ கபாலிக வேஷ
நீ யார் என்று உண்மையைச் சொல்
பைரவர் இரண்டடி பின்வாங்கி, பிற
வராய்த் தள்ளாடித் தொ
அப்போது அங்கே
டையில் 'ஹாஹாகாரம்'
கிடந்த அந்தக் கபாலிகர்
என்று விக்கிரமன் கூட
பொன்னனோ, விய
உணர்ச்சிகள் பொங்க, தன்
கபால பைரவர் மேலே விழுந்து
ஓடிவரத் தொடங்கிய சமயத்தில்,

அவரைப் பார்த்ததும், கபால
நம்ப முடியாததாயிருந்தது.
தங்க, அவருடைய பீதி அதிக
நடுங்கிற்று. இன்னும் சிறுத்
து நேருக்கு நேராக முகத்தை
ளியே! மகாகாளியின் சந்நிதியில்
என்று கேட்டபோது, கபால
நடக்கவும் நிற்கவும் சக்தியற்ற
பென்று கீழே விழுந்தார்.
ழ்ந்திருந்த காளி உபாசகர்களி
ண்டாயிற்று. வெறியில் மூழ்கிக்
ால் என்ன விபரீதம் நேர்டுமோ
சிறிது துணுக்கமடைந்தான்.
பு, பயபக்தி முதலிய பலவித
மறந்து செயலற்று நின்றான்.
லா புறமிருந்தும் கபாலிகர்கள்
சிறுத்தொண்டர் சட்டென்று



பலிபீடத்தின் மீது ஏறிக்கொண்டார்.

''மகா ஜனங்களே! காளி மாதாவின் பக்தர்களே! நெருங்கி வாருங்கள். 'மகா கபால பைரவர்' என்ற பொய்ப் பெயருடன் உங்களையெல்லாம் இத்தனை காலமும் ஏமாற்றி வஞ்சித்து வந்த ஒற்றைக் கை மனிதனைப் பற்றிய உண்மையைச் சொல்லுகிறேன்''என்றார்.

சிறுத்தொண்டரைப் பார்த்தவுடனே கபால பைரவர் பீதியடைந்து கீழே விழுந்ததினால், ஏற்கெனவே அக் கபாலிகர்களின் மனத்தில் குழப்பம் உண்டாகியிருந்தது. எனவே, சிறுத்தொண்டர் மேற்கண்டவாறு சொன்னதும், அவர்கள் பலிபீடத்தைச் சூழ்ந்து கொண்டு, அவரையே பார்த்தவண்ணமாய் நின்றார்கள்.

சிறுத்தொண்டர் கம்பீரமான குரலில், காடு மலையெல்லாம் எதிரொலி செய்யுமாறு பேசினார்.

'கேளுங்கள்! நாம் பிறந்த இந்தத் தமிழகமானது மகா புண்ணியம் செய்த நாடு. எத்தனையோ மகா புருஷர்கள் இந்நாட்டிலே தோன்றி மெய்க் கடவுளின் இயல்பையும், அவரை அடையும் மார்க்கத்தையும் நமக்கு உபதேசித்திருக்கிறார்கள். திருமூல மகரிஷி,

*அன்பும் சிவமும் இரண்டென்பர்*
*அறிவிலார்*

என்று அருளியிருக்கிறார், வைஷ்ணவப் பெரியார்.

*அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக*
*இன்புருகு சிந்தை இடுதிரியா -*
*நன்புருகி*
*ஞானச் சுடர் விளக்கேற்றினேன்*

என்று திருவாய் மலர்ந்திருக்கிறார். இத்தகைய மகோந்தமான தர்மங்களுக்கு உறைவிடமாயுள்ள நமது நாட்டில், கபாலிகம், பைரவம் என்னும் அநாசாரக் கோட்பாடுகளையும், நரபலி, மாமிசப் பட்சணம் முதலிய பயங்கர வழக்கங்களையும் சிலர் சிறிது காலமாகப் பரப்பி வருகிறார்கள். அன்பே உருவமான சிவபெருமானும் கருணையே வடிவமான பராசக்தியும் நரபலியை விரும்புகிறார்கள் என்று நம்புவது எவ்வளவு பெரிய அறியாமை? சிவபெருமான் கையில் மண்டை ஓட்டை வைத்திருப்பதாகவும், பராசக்தி கபால மாலையைத் தரிப்பதாகவும், புராணங்களில் சொல்லியிருப்பதெல்லாம் தத்துவார்த்தம் கொண்டவை என்பதை நமது பெரியோர்கள் நமக்கு உணர்த்தியிருக்கிறார்கள். அவ்விதமிருக்க இப் புண்ணிய நாட்டில் நரபலியென்னும் கொடிய வழக்கம் பரவுவதற்குக் காரணம் என்ன? இந்தத் தீய பிரசாரத்தின் மூலவேர் எங்கே இருக்கிறது? - இதைக் கண்டுபிடிப்பதற்காக நானும் சற்று முன் இந்தப் பலிபீடத்தில் கட்டுண்டு கிடந்த என் தோழர் சிவனடியாரும் பெருமுயற்சி செய்து வந்தோம்.



''என்னைப் புகழ்ந்து கவிதை பாடிய புலவருக்குப் பொன்னும், பொருளும் பரிசாகக் கொடுப்பதை ஏன் தடுக்கிறீர்கள் அமைச்சரே?''

''அப்புறம் பொய் சொல்வதை நாமே ஊக்கப்படுத்துவதாக ஆகிவிடாதா மன்னா?''

- கே.ஆனந்தன்

"கப்பத் தொகையை ஏன் செலுத்த வில்லை என்று கேட்டு அண்டை நாட்டு அரசன் ஓலை அனுப்பியுள்ளான் மன்னா."
"தள்ளுபடி செய்ய முடியுமா என்று கேட்டுப் பதில் அனுப்பிவிடலாமா?"

- சீர்காழி வி.ரேவதி



கடைசியாக, அந்த முயற்சியில் என் தோழர் வெற்றி பெற்றார்; உண்மையைக் கண்டு பிடித்தார்..."

அப்போது ஒரு குரல், "அவர் யார்?" என்று கேட்டது.

"அவர் எங்கே?" என்று பல குரல்கள் கூவின.

உண்மை என்னவெனில், சிறுத் தொண்டர் திடீரென்று தோன்றியவுடன் ஏற்பட்ட குழப்பத்தில் சிவனடியார் ஒருவரும் கவனியாதபடி அந்த இடத்தை விட்டு அகன்று விட்டார்.

சிறுத்தொண்டர் மேலும் சொல்வார்:-

"இன்னும் இரண்டு நாளில் உறையூரில் நடக்கப் போகும் வைபவத்துக்கு நீங்கள் வந்தால், அந்த மகான் யார் என்பதை அறிவீர்கள். தற்போது, இதோ இங்கே கீழே விழுந்து பயப்பிராந்தியினால் நடுங்கிக் கொண்டிருக்கும் கபால பைரவன் யார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். புகழ் பெற்ற நமது மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில் - இருபது வருஷத்துக்கு முன் னால் - வாதாபி அரசன் புலிகேசி நமது தமிழகத்தின் மேல் படையெடுத்து வந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா..." என்று சிறுத்தொண்டர் கேட்டு நிறுத்திய போது பல குரல்கள், "ஞாபகம் இருக் கிறது!" என்று கூவின.

"அந்த ராட்சதப் புலிகேசியும் அவனு டைய படைகளும் நம்பிக்கைத் துரோகம் செய்து, இச்செந்தமிழ் நாட்டின் பட்டணங் களிலும் கிராமங்களிலும் செய்து விட்டுப் போன அட்டூழியங்களையெல்லாம் நீங்கள் மறந்திருக்க முடியாது. மகேந்திர சக்கர வர்த்தி காலமான பிற்பாடு தரும ராஜாதி ராஜ நரசிம்ம பல்லவரும், நானும் பெரும் படை கொண்டு புலிகேசியைப் பழிவாங்கு வதற்காக வாதாபிக்குப் படையெடுத்துச் சென்றதையும் நீங்கள் அறிவீர்கள். வாதாபி நகரத்தின் முன்னால் நடந்த கொடிய யுத்தத்தில், நமது வீரத் தமிழ்ப்படைகள் புலிகேசியின் படைகளையெல்லாம் ஹதா ஹதம் செய்தன. யுத்த களத்துக்கு வந்த புலிகேசியின் படைகளிலே ஒருவராவது திரும்பிப் போகவிடக் கூடாது என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருந்தார். ஆனால், அவருடைய கட்டளைக்கு மாறாக ஒரே ஒருவனை மட்டும் திரும்பிப் போகும் படி நான் அனுமதித்தேன். போரில் கையை இழந்து 'சரணாகதி' என்று காலில் விழுந்த வனைக் கொல்வதற்கு மனமில்லாமல் அவனை ஓடிப்போக அனுமதித்தேன். அந்த ஒற்றைக் கை மனிதன்தான் இதோ விழுந்து கிடக்கும் நீலகேசி, புலிகேசி யைவிடக் கொடிய அவனுடைய சகோ தரன் இவன்!"

இதைக் கேட்டதும் அந்தக் கூட்டத்தில், "ஆகா!" "அப்படியா?" "என்ன மோசம்!" "என்ன வஞ்சகம்!" என்று பலவிதமான

பேச்சுக்கள் கலகலவென்று எழுந்தன. சிறிது பேச்சு அடங்கிய பிறகு சிறுத் தொண்டர் மீண்டும் கூறுவார்:

''இவனை நான் மன்னித்து உயிரோடு திருப்பி அனுப்பினேன் என்று தெரிவித்த போது சக்கரவர்த்தி, 'நீ பிசகு செய்தாய்; இதனால் ஏதாவது விபரீதம் விளையும்' என்று சொன்னார். அது உண்மையாகி விட்டது. இந்த நீலகேசி, கபாலிக வேஷத்தில் நமது புண்ணியத் தமிழகத்தில் வந்து இருந்துகொண்டு, பஞ்சத்தினால் ஜனங்களுடைய புத்தி கலங்கியிருந்த காலத்தில், கபாலிகத்தையும் நரபலியையும் பரப்பத் தொடங்கினான். எதற்காக? வீரத்தினால் ஜெயிக்க முடியாத காரியத்தைச் சூழ்ச்சியினால் ஜெயிக்கலாம் என்றுதான். கடல்களுக்கு அப்பாலுள்ள தேசங்களுக்கெல்லாம் புகழ் பரவியிருக்கும் நமது மாமல்ல சக்கரவர்த்திக்கு விரோதமாக உங்களையெல்லாம் ஏவிவிட்டு, சதி செய்விக்கலாம் என்றுதான். இந்த உத்தேசத்துடனேயே இவன் கொல்லிமலையின் உச்சியிலுள்ள குகைகளில் ஆயிரக் கணக்கான கத்திகளையும் கோடாரிகளையும் சேர்த்து வைத்திருந்தான்...''

''ஆ!'' என்று கபால பைரவனின் கோபக் குரல் கேட்டது.

''ஆம்; அந்த ஆயுதங்களையெல்லாம் சக்கரவர்த்தியின் கட்டளையினால் இன்று அப்புறப்படுத்தியாகி விட்டது. இன்னும் இந்தச் சோழநாட்டு இளவரசன் விக்கிரமனையும் தன்னுடைய துர்நோக்கத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்ள எண்ணியிருந்தான். அதற்காகவே பார்த்திபசோழ மகாராஜாவின் வீரபத்தினி அருள்மொழித் தேவியைச் சிறைப்படுத்தி வைத்திருந்தான்...'' அப்போது மகா கபால பைரவர் தரையிலிருந்து சட்டென்று எழுந்து நின்று, ''எல்லாம் பொய்; கட்டுக்கதை; இதற்கெல்லாம் சாட்சி எங்கே?'' என்று கேட்டார். அப்போது ஒருவாறு அவருடைய பீதி தெளிந்ததாகக் காணப்பட்டது.



கபால பைரவர், ''சாட்சி எங்கே?'' என்று கேட்டதும் ''இதோ நான் இருக்கிறேன் சாட்சி!'' என்றது ஒரு குரல். திடீரென்று ஒரு வெள்வேல மரத்தின் மறைவிலிருந்து மாரப்ப பூபதி தோன்றினான்.

''ஆமாம், நான் சாட்சி சொல்கிறேன். இந்தக் கபால பைரவர் என்னும் நீலகேசி உண்மையில் கபாலிகன் அல்ல. வேஷதாரி. இவன்

மகாராஜாதிராஜா நரசிம்ம பல்லவ சக்கர வர்த்திக்கு எதிராகச் சதிசெய்தான். அந்தச் சதியில் என்னையும் சேரும்படி சொன்னான். நான் மறுத்துவிட்டேன். அதன் மேல், இந்தத் தேசப்பிரஷ்ட இளவரசனைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ள விரும்பினான். சக்கரவர்த்தியின் கட்டளைப்படி காஞ்சிக்கு நான் அனுப்பிய இந்த இளவரசனை இவன் வழியில் மறித்து இங்கே கொண்டு வர ஏற்பாடு செய்தான்.''

அப்போது சிறுத்தொண்டர், ''போதும், மாரப்பா! உன் சாட்சியம் போதும்!'' என்றார்.

**மா**ரப்பன் மனத்திற்குள் என்ன உத்தேசித்திருந்தானோ தெரியாது. தம்மைப் புறக்கணித்துவிட்டு, மகா கபால பைரவர் விக்கிரமனுக்கு யுவராஜா பட்டம் கட்டுவதாகச் சொன்னதைக் கேட்டு, அவனுக்கு ஆத்திரம் உண்டாகியிருக்கலாம். அல்லது சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதிசெய்த குற்றம் தம் பேரில் ஏற்படாமலிருக்க வேண்டுமென்று எண்ணியிருக்கலாம்.

அவன் உத்தேசம் எதுவாயிருந்தாலும், அப்போது யாரும் எதிர்பாராத ஒரு காரியத்தை அவன் செய்தான். கையில் உருவிய கத்தியுடன் மகா கபால பைரவர் நின்ற இடத்தை அணுகினான். ''சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதிசெய்த இந்தச் சாம்ராஜ்யத் துரோகி இன்று காளி மாதாவுக்குப் பலியாகட்டும்!'' என்று கூறியவண்ணம் யாரும் தடுப்பதற்கு முன்னால், கத்தியை ஓங்கி வீசினான். அவ்வளவுதான்; கபால பைரவரின் தலை வேறாகவும் உடல் வேறாகவும் கீழே விழுந்தன.

எல்லாரும் பிரமித்துத் திகைத்து நிற்கும் போது மாரப்பபூபதி பலி பீடத்தண்டை வந்து சிறுத்தொண்டருக்கு முன்னால் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ''பிரபோ! ஆத்திரத்தினால் செய்து விட்டேன். நான் செய்தது குற்றமானால் மன்னிக்க வேண்டும்'' என்றான்.

அச்சமயம் யாரும் எதிர்பாரத இன்னொரு காரியம் நிகழ்ந்தது. கையில் கத்தியுடன் சித்திரகுப்தன் எங்கிருந்தோ வந்து பலிபீடத்தருகில் குதித்தான். படுத்திருந்த மாரப்பனுடைய கழுத்தில் அவன் வீசிய கத்தி விழுந்தது! அக் குள்ளனை உடனே சில பல்லவ வீரர்கள் பிடித்துக்

**''வாதாபி போரில் கையை இழந்து 'சரணாகதி' என்று காலில் விழுந்தவனைக் கொல்வதற்கு மனமில்லாமல் ஓடிப்போக அனுமதித்தேன். அந்த ஒற்றைக் கை மனிதன்தான் நீலகேசி'' என்றார் சிறுத்தொண்டர்.**

கொண்டார்கள். குள்ளனோ ''ஹீஹீஹீ' என்று சிரித்தான்.

**சி**ல நிமிஷ நேரத்தில், நடந்துவிட்ட இக்கோர சம்பவங்களைப் பார்த்த விக்கிரமன் மிகவும் அருவருப்பை அடைந்தான். யுத்த களத்தில் நேருக்கு நேர் நின்று போரிட்டு ஒருவரையொருவர் கொல்லுவது அவனுக்குச் சாதாரண சம்பவமானாலும், இம்மாதிரி எதிர்பாராத கொலைகள் அவனுக்கு வேதனையளித்தன. உடனே, அருகில் நின்ற பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! நாம் போகலாம் வா!'' என்றான். அப்பொழுது தான் தன்னையும் பொன்னனையும் சூழ்ந்து நின்ற பல்லவ வீரர்களை அவன் கவனிக்க நேர்ந்தது.

அந்த வீரர்களின் தலைவன் தம் கையிலிருந்த ஓலையை விக்கிரமனிடம்



காட்டினான். அதில் நரசிம்ம சக்கரவர்த்தியின் முத்திரை பதித்த கட்டளை காணப்பட்டது. உறையூரிலிருந்து காஞ்சிக்கு வந்து கொண்டிருக்கும் சோழ இளவரசன் விக்கிரமனை வழியில் திருப்பி உறையூருக்கே மீண்டும் கொண்டு போகும்படிக்கும், விசாரணை உறையூரிலேயே நடைபெறுமென்றும் அவ்வோலையில் கண்டிருந்தது.

விக்கிரமன் அந்த ஓலையைப் பார்த்துவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய கையானது உடைவாளின் மேல் சென்றது. அப்போது பொன்னன், ''மகாராஜா! பதறவேண்டாம்!'' என்றான்.

இதையெல்லாம் கவனித்த சிறுத்தொண்டர், பல்லவ வீரர் தலைவனைப் பார்த்து, ''என்ன ஓலை?'' என்று கேட்டார். வீரர் தலைவன் அவரிடம் கொண்டு போய் ஓலையைக் கொடுத்தான். சிறுத்தொண்டர் அதைப் படித்துப் பார்த்துவிட்டு, ''விக்கிரமா! நீ இந்தக் கட்டளையில் கண்டபடி உறையூருக்குப் போ! நானும் உன் தாயாரை அழைத்துக் கொண்டு உறையூருக்குத்தான் வரப் போகிறேன். இன்று நீ புரிந்த வீரச் செயலைச் சக்கரவர்த்தி அறியும்போது, அவருடைய மனம் மாறாமல் போகாது. அவசரப்பட்டு ஒன்றும் செய்ய வேண்டாம்!'' என்றார்.

அடுத்த நிமிஷம் விக்கிரமனும் பொன்னனும் பல்லவ வீரர்கள் புடை சூழ அந்த மயான பூமியிலிருந்து கிளம்பிச் சென்றார்கள்.

அப்புறம் சிறிது நேரம் அங்கே கூடியிருந்தவர்களுக்கு மெய்க் கடவுளின் ஸ்வரூபத்தையும், நரபலியின் கொடுமையையும் பற்றிச் சிறுத் தொண்டர் விரித்துரைத்தார். அதன் பயனாக, அன்று பலியாக இருந்தவர்களும், பலி கொடுக்க வந்தவர்களும் மனம் மாறி, தங்களைத் தடுத்தாட்கொண்ட மகானைப் புகழ்ந்து கொண்டே தத்தம் ஊர்களுக்குச் சென்றார்கள். பலிபீடத்தில் கட்டுண்டுகிடந்த சிவனடியார் யாராயிருக்கலாமென்று அவர்கள் பலவாறு ஊகித்துப் பேசிக் கொண்டே போனார்கள்.

**சிறுத்தொண்டரிடம், "பிரபோ, ஆத்திரத்தினால் செய்துவிட்டேன். மன்னிக்க வேண்டும்" என்றான் மாரப்பன்.**

(தொடரும்)

# கணக்கு

பண விஷயத்தில் பெரும்பாலும் நாம் கணக்காகவே இருக்கிறோம். இதை நமக்கு யாரும் சொல்லித் தர வேண்டியதில்லை. ஒரு பொருளுக்கு அதன் விலையைவிட ஒரு பைசா அதிகம் கொடுப்போமா? மாட்டோம். பணத்தில் கணக்காக இருப்பது உண்மை. ஆனாலும் பணத்தைக் கொடுத்துப் பல பொருட்களை வாங்குகிறோமே, அவற்றில்தான் இத்தனை பொருட்கள் நமக்குப் போதும் என்று கணக்காக இருக்கமாட்டேன் என்கிறோம். நாம் நிம்மதியாக உயிர் வாழ்வதற்குச் சொற்ப பொருட்கள் போதும். இந்த வஸ்துக்களுக்குத் தேவைப்படும் பணத்தை மட்டுமே நாம் சம்பாதித்தால் இப்போது போல் ஆலாப் பறக்கவே வேண்டாம். அநாவசியமான பொருட்களுக்காகவே கணக்கில்லாமல் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. அதற்காக, ஆத்ம விசாரத்துக்கும் ஈசுவர தியானத்துக்கும் பரோபகாரத்துக்கும் செலவிட வேண்டிய காலத்தை எல்லாம், கணக்கில்லாமல் விரயம் செய்ய வேண்டியிருக்கிறது. இரண்டு தினுசில் கால விரயம். முதலில் சம்பாதிப்பதில் கால விரயம்; அப்புறம் வேண்டாத பொருட்களைத் தேடித் தேடிப் போவதில் கால விரயம். நிகர விளைவாகவோ ஆத்ம சாந்தியைக் குலைத்துக் கொள்கிறோம். திருப்தியே இல்லாமல் ஆசை வேகத்திலும், பல சந்தர்ப்பங்களில் ஆசை நிறைவேறாத ஏமாற்றத்திலும் அவஸ்தைப் படுகிறோம்.

நாம் உயிர் வாழ இந்தப் பொருள் அவசியம் தானா என்று பார்த்துக் கணக்காகச் செலவு செய்வதே உண்மையில் 'கணக்காயிருப்பதாகும்'. வேண்டாத பொருட்களுக்குப் பேரம் பண்ணி, சாமர்த்தியமாக விலைபேசி, அதற்கு ஒரு பைசாகூட அதிகம் கொடுக்கவில்லை என்பதெல்லாம் கணக்காய் இருத்தல் இல்லை.



- ஜகத்குரு
காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர
சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

சோழ மன்னன் முதலாம் இராஜேந்திரனுக்கு ஓர் ஆசை. தந்தை இராஜ ராஜ சோழனால் நிர் மாணிக்கப்பட்ட தஞ்சை பெரிய கோயி லைப் போலவே, தாமும் ஒரு கோயிலைக் கட்டினால் என்ன? அதுவும் அச்சு அசலாய் தஞ்சை பெரிய கோயிலைப் போலவே. தம் போர்த்திறத்தால் படை திரட்டிச் சென்று, வடபுலங்கள் அனைத்தையும் வென்று வந்தவன் இராஜேந்திரன். வட நாட்டுப் படையெடுப்பு பெருவெற்றியாக நிகழ்ந்ததால், தலைநகர் சோழீச்சரம், கங்கை கொண்ட சோழபுரம் ஆனது. அங்கு முதலாம் இராஜேந்திரனால் கட்டி முடிக் கப்பட்டதுதான் பெருவுடையார் திருக் கோயில். இக்கோயிலைக் காணும்போதே இராஜேந்திரன் மனதுக்குள் எழுந்து நின்ற ஆசை நமக்குப் புலப்படும்! அந்தக் கோயிலின் சிறப்புகளில் சில துளிகள்:

✪ கோயிலின் முகப்பில் கிழக்குத் திசை யில் வானுயர்ந்த நிலையில் ஆறு கோபுரங் கள் இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன. ஆனால், இன்று இரண்டு கோபுரங்களின் மிச்ச சொச்சங்கள் மட்டுமே எஞ்சியிருக்கின்றன. ஐந்தாவது கோபு ரத்தின் கல் தூண்கள் இரண்டு, பிரமாண்ட உயரத்தில் எழுந்து நிற்கின்றன. ஆறாவது கோபுரமே கோயிலின் பிரதான நுழை வாயில்.

✪ நுழைவாயிலைக் கடந்து உள்ளே வந்தால், எழிலார்ந்த அழகிய பரந்த புல்வெளி கொண்ட வெளிப்பிரா காரம். மதிற்சுவரின் உட்புறம் நான்கு பக்கங்களிலும், ஆளுயர நீண்ட நெடியக் கல் மேடை. அதில் வரிசையாக நூற்றி யெட்டு லிங்கங்கள் (கற்க ளால் ஆனது) இருந்ததற்கான அடையாளங்கள் கல் பீடங்களாகக் காட்சி தருகின்றன.

✪ மூலவரின் சன் னதிக்கெதிரே மகா நந்தி. இந்நந்தி சிறி தளவே உயர்ந்த








## கங்கைகொண்ட சோழபுரம்

திறந்தவெளி மேடையில், கருங்கற்களால் பிரமாண்ட தோற்றத்துடன் விளங்குகிறது. பிரதானக் கோயிலுக்குச் செல்ல தெற்கிலும் வடக்கிலுமாக இருபுறங்களிலும் படிக்கட்டுகள் உள்ளன. வாயிலை அடுத்து உள்ளே சென்றால் நீண்டு செல்கிறது மகா மண்டபம்.

✪ மகா மண்டபத்தைக் கடந்து அர்த்த மண்டபத்துக்குள் நுழைந்தால், கற் பெருந்தூண்கள் எட்டு, ஆங்கில 'ஐ' எழுத்து வடிவில் இரு வரிசைகளில் எழுதப்பட்டுள்ளன. இதனை எட்டுக் கால் மண்டபம் என்றும் அழைக்கின்றனர். மண்டபத் தூண்களின் மேல் புறத்தின் இரு பக்கங்களிலும், ஐம்பத்தி மூன்று வகையான முத்திரைகளை வெளிப்படுத்தும், நடன அபிநயச் சிற்பங்கள் அழகுற செதுக்கப்பட்டுள்ளன. இம் மண்டபத்தில் காணப்படும் துவார பாலகர்களின் இரு புறமும், விநாயகர் சரஸ்வதி உருவச் சிலைகள் வடிக்கப் பட்டுள்ளன.

✪ கருவறையில் மூல மூர்த்தியாக அருள்மிகு பெருவுடையார் சிவலிங்கத் திருமேனியாக, எல்லையற்ற பேரொளியுடன் திகழ்கிறார். இத்தனை பெரிய சிவலிங்கம் இந்தியாவில் வேறெங்கும் இல்லையென்று கூறப்படுகிறது.

✪ கருவறையின் உள்ளே எப்பொழுதும் ஒளியும் குளிர்ச்சியும் ஒருங்கே நிலவுகிறது. காரணம், கருவறைச் சுற்றில் கிடைத்ததற்கு அரியதும், விலை மதிப்பிட முடியாததுமான சந்திரகாந்தக் கற்கள் பதித்து வைக்கப்பட்டிருக்கிறது.

✪ கருவறையின் மேல் எழுப்பப்பட்டிருக்கும் கோபுர அழகைக் காண, கண் கோடி வேண்டும். தஞ்சை பெரிய கோயிலின் கோபுர அழகில் ஆண்மையின்

# எழுந்து நிற்கும் ஆசை!

## எப்படிப் போகலாம்?

| | | |
|---|---|---|
| சென்னையிலிருந்து | - | 245 கி.மீ |
| கும்பகோணத்திலிருந்து | - | 35 " |
| தஞ்சாவூரிலிருந்து | - | 74 " |
| திருச்சியிலிருந்து | - | 102 " |
| சிதம்பரத்திலிருந்து | - | 41 " |

* அருகிலுள்ள புகைவண்டி நிலையம் - கும்பகோணம்
* ஜெயங்கொண்டம், அரியலூர், கும்பகோணம் மற்றும் மயிலாடுதுறை ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன.
* ஜெயங்கொண்டம் - காட்டுமன்னார் கோயில் நகரப் பேருந்தும், இவ்வழியாகச் செல்கிறது.
* சென்னையிலிருந்து, கும்பகோணம் - தஞ்சாவூர் சாலை வழியாகக் கங்கைகொண்ட சோழபுரத்தை அடையலாம்.
* திருச்சியிலிருந்து, அரியலூர் - ஜெயங்கொண்டம் வழியாகக் கங்கைகொண்ட சோழபுரத்தை அடையலாம்.

இங்கு தங்கும் வசதி குறைவு என்பதால் கும்பகோணத்தில் தங்கி, ஒரு நாள் சுற்றுலாவாகச் சென்று வரலாம். நாள் முழுவதும் பார்த்தாலும் பருக முடியாத அழகுகள் நிறைந்துள்ளன.



கம்பீரம் காணப்படும். கங்கை கொண்ட சோழபுரம் கோயிலின் கோபுரமோ சற்றே சாய்ந்த நிலையில் பெண்மையின் மென்மையோடு மிளிர்கின்றது.

✪ மகா மண்டபத்தின் வடகிழக்கு மூலையில், ஒரே பீடத்தில் நவக்கிரகங்கள் வடிக்கப்பட்டுள்ளன. தாமரைப்பூ வடிவில், தலைமை நிலை மேவிய சூரிய யந்திரம். நான்கு மூலைகளிலும் கந்தர்வ கன்னியர்கள். அதற்கு மேலாக எட்டுக் கிரகங்களின் திருவுருவங்கள். இரண்டு சக்கரங்கள். பின்னங்கால்களை ஊன்றி முன்னங்கால்களை உயர்த்தி நிற்கும் ஏழு குதிரைகள். தேர்ச் சாரதியாக அருணன். இவை அனைத்தும் ஒரே பீடத்தில்.

✪ கருவறையின் தென்புற வெளிச் சுவரின் சற்றே உயரத்தில், நர்த்தன விநாயகர் நெருக்கமான கம்பி வேலிக் கதவுக்குள் சிறை பிடிக்கப்பட்டிருக்கிறார். காரணம், அந்த விநாயகரைக் கைகளினால் தொட்டுத் தட்டினால், ஏழு சுரங்களின் ஒலியலைகள் எழும்பி அடங்குமாம். நம்மவர்கள் விட்டு வைப்பார்களா என்ன? அதனாலே சிறை.

✪ கோயிலின் வடக்குப் புற படிக்கட்டுகளில் இறங்கி வரும்போது, கிழக்கு முகம் பார்த்துக் கருவறையின் வெளிச் சுவரில், மிக அழகிய சுற்சிற்பம் கண்களுக்கு விருந்தாக அமைகின்றது. சிவன் - பார்வதி அமர்ந்த திருக்கோலத்தில் வீற்றிருக்க, கொன்றைப் பூக்கள் மாலையினைச் சண்டிகேஸ்வரரின் தலை மீது தவழவிட்டு, அவருக்கு அனுக்கிரகம் செய்கிற உயிர்ச் சிற்பம் அது.

✪ பிரகாரத்துக்குத் தெற்கே தட்சிண கைலாயமும், தென் மேற்கில் விநாயகரும், வடக்கே உத்திரக் கைலாயமும், வடகிழக்கு கோமுகிக்கு அருகில் சண்டிகேஸ்வரர் கோயில், மகிஷாசுரமர்த்தினி கோயில் மற்றும் தல விருட்சமாகிய வன்னி மரம் ஆகியனவைகள் இருக்கின்றன. சிங்க முகக் கிணறு இங்கு சிறப்பு வாய்ந்தது.

✪ இரண்டரை ஆண்டுகளுக்கு ஒருமுறை வருகிற சனிப்பெயர்ச்சி திருநாளன்று இங்கு ஒன்ற லட்சம் பேர் வந்து வழிபடுகின்றனர். தினசரி நூற்றுக் கணக்கிலும், விடுமுறை தினங்களில் ஆயிரக் கணக்கிலும் வெளியூர் சுற்றுலாப் பயணிகள் இங்கு வந்து செல்கின்றனர்.

✪ கோயிலின் மொத்த விஸ்தீரணம் பதினெட்டு ஏக்கர். மதிற்சுவர் கொண்ட கோயில் உட்பரப்பு மட்டும் ஆறு ஏக்கர். கோயிலின் உள்ளேயும், வெளிப்பிரகாரத்திலும் சுற்றிலுமாகப் பசுமை போர்த்திய அழகிய புல்வெளி அதிக சிரத்தையுடன் பராமரிக்கப்பட்டு வருகிறது.

**கட்டுரை, படங்கள்:**
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# கர்ப்பம் தரிக்கும் வார்த்தைகள்

கன்னிக்கோவில் இராஜா

நீண்ட நாள்களாக
என்னிலிருந்த
உனக்கான வார்த்தைகள்
கர்ப்பம் தரிக்கத் துவங்குகின்றன

பத்துமாத பிரசவமெனினும்
முதலிரண்டு மாதங்களிலேயே
ஆரம்பமாகின்றன வலிகள்

நவீன மாத்திரைகளினூடே
வலி மறந்த ஒரு நாளில்
குறுஞ்செய்தியனுப்புகிறாய்
படித்து முடித்தவுடனேயே
ஆரம்பாகிறது என்னுள்
குழப்ப வட்டங்கள்

சின்னதாய், கொஞ்சம் பெரிதாய்
வட்டம், மேலும் வட்டம் என
விரியத் துவங்கிய மனக்குளம்
சலனமற்றுப் போகிறது
நீண்ட வட்டங்களுக்குப் பின்னால்

தலைக்கு மேல் கைகளைக் கட்டி
சாய்வு நாற்காலியில்
சாயும் தருணங்களில்
மனக்கண் முன்னே
பிரசவிக்க துவங்குகின்றன
கர்ப்பம் தரித்த வார்த்தைகள்



''இங்கே பாரேன்''

''பேச மாட்டியா''

''தப்புத்தான்... ஆனா, வேணும்னு செய்யலை''

''எம் பக்க நியாயத்தை கேட்க மாட்டியா?''

''கடவுளே... இப்ப நான் என்னதான் செய்யணும்.''

''சரி... நீ பேச மாட்டே; அவ்வளவு தானே. இன்னிக்கு விதிச்சது இதுதான்னு நினைச்சுக்கிறேன்.''

''ஸாரி அங்கிள்..''

''பரவாயில்லம்மா. நீ வேணும்னு பந்தை எம்மேல போடலியே. ஹை.. காட்ச் பிடி.''

''அங்கிள்... ஏன் ரெண்டு பேரும் ரொம்ப நேரமா பேசாம உக்கார்ந்திருக்கீங்க.''

''போச்சுடா... நீ கூடக் கவனிச்சுட்டியா.. விளையாட்டு ஜோர்லயும்...''

''சில சமயம் எங்க அப்பா, அம்மாவும் இப்படித்தான் மூஞ்சியைத் தூக்கி வச்சுக்கிட்டு உக்கார்ந்திருப்பாங்க.''

''அப்புறம் எப்படிச் சமாதானம் ஆவாங்க.''

''தெரியலியே அங்கிள்... நான்தான் தூங்கிடுவேனே.''

''அதோ உங்கம்மா உன்னைக் கூப்பிடறாங்க.''

''ஸார். கடலை வேணுமா.''

''ஏற்கெனவே வறுத்து வைச்சிருக்கு.''

''இது அவிச்ச கடலை ஸார்.''

''அடப் போய்யா...''

''ஏதோ சண்டை போல இருக்கு. நம்ம மேல காட்டறார். கடல... கடலேய்..''

''உனக்கு நிஜம்மா இவ்வளவு அழுத்தம் கூடாது.''

''எத்தனை தடவை ட்ரை பண்ணேன் தெரியுமா... நெட்வொர்க் பிஸி.''

''மெசேஜ் கொடுத்தேனே... பார்த்தியா?''

''என்னப்பா இது. பேசவே மாட்டியா...''

''ஏய். உம்மேல எறும்பு;



கன்னெறும்பு. பொய் சொல்லலே... நிஜம்.''

''அடப்பாவி. எப்படி உன்னால இப்படி இருக்க முடியுது.''

''ஸாரி... பசிக்குது. தூக்கம் தர்மம்...''

''ப்ச்.''

''ஸா...ரி...''

''வேற ஆளைப் பாரு.''

''நான்கூட பிச்சைக்காரன் மாதிரி இருக்கேன் இப்ப... காதல் பிச்சை!''

''சிரிக்க மாட்டியா...?''

''உன்னைப் பார்த்த பின்பு என் எல்லாக் கவிதைகளும் பொய்யென்று தெரிந்ததுன்னு அப்ப எழுதினேன். உன் கோபம் எதையும்விட உயரம்; எதையும்விட ஆழம்னு இப்ப எழுதத் தோணுது.''

''அங்கிள் பை''

''கிளம்பிட்டியா''

''ம்... அவங்க பேசிட்டாங்களா''

''எங்கே உச்சில இல்ல இருக்கு''

''ஆல் தி பெஸ்ட் அங்கிள்..''

''பாரு... வருங்காலப் பெண்ணரசி எப்படி வாழ்த்திட்டுப் போறா.''

''நான் வந்து ஒரு மணி நேரம் ஆச்சு. எவ்வளவு கெஞ்சறேன். நீ அலட்டிக்கவே இல்லை.''

# ஒன் வே!

ரிஷபன்

''ஏய்... அப்புறம் [illegible] கிளம்பிப் போயிருவேன்... ப்ளீஸ்டா.''

''எல்லாம் அவுட். என்னவெல்லாம் நினைச்சேன். எல்லாம் போச்சு.''

''சுண்டல் வேணுமா அண்ணே?''

''கூட வேணா வரட்டுமா?''

''என்ன சொல்றீங்க?''

''உனக்கு உதவியா டப்பாவைத் தூக்கிக்கிட்டு வரட்டுமா?''

''என்ன அண்ணே கிண்டலா''

''இல்லப்பா... சாமி சத்தியமா''

''அடப் போங்கண்ணே. சும்மா வெளையாடிக்கிட்டு. சுண்டல்... சுண்டல்..''

''அட.... இவங்கூட என்னைச் சேர்த்துக்க மாட்டேங்கிறான்.''

''உனக்கு மட்டும்தான் அழுத்தமா?''

''முடியலைடா... என்ன யோசிச்சாலும் நிஜம்மா உன்மேல கோபம் வரலே. ஆனா, உன்னைச் சமாதானம் பண்ண இதுக்கு மேல என்ன செய்யறதுன்னும் புரியல...''

''ஓக்கே, நான் பண்ணது தப்பு... என்ன தண்டனை வேணா கொடு. ஆனா பேசாம மட்டும் இருக்காதே.''

''ஸாரி... ஸாரி...''

''ஐ லவ் யூடா'' ஒரே ஒரு வார்த்தை தான் பேசினாள். அவனது அத்தனை அவஸ்தைகளையும் அடித்துக் கொண்டு போயிற்று அது.

## காதல் கவிதை

கோடி வருடத்துக்கு
ஒரு முறை
பூமியில் அதிசயம்
நடக்குமாம்
இம்முறை நீ!

சகா

ரஜினி கதாநாயகனாகவும், சத்யராஜ் வில்லனாகவும் நடிக்க, மகனுக்கும், அப்பாவுக்கும் இடையில் நடக்கும் மோதல் கதைதான் 'மிஸ்டர் பாரத்'. அப்போது வெளியான 'காக்கிச் சட்டை' படத்தில் வில்லன் சத்யராஜ், அடிக்கடி 'தகடு... தகடு' என்று சொன்னது ரசிகர்களிடம் மிகுந்த வரவேற்பினைப் பெற்றது. அதுபோல, இந்தப் படத்திலும் அவரை ஏதாவது சொல்ல வைக்க வேண்டும் என்று திட்டமிட்டோம். சென்னை ஆனந்த் தியேட்டர் அதிபர் ஜி.உமாபதி, யாரிடம் பேசினாலும் அடிக்கடி 'என்னம்மா கண்ணு?' என்ற வார்த்தைகளைச் சகஜமாகப் பயன்படுத்துவார். நாங்களும் அதையே சத்யராஜுக்குப் பயன்படுத்தலாம் என்று தீர்மானித்தோம்.

நல்லவன் போல நடிக்கும் ஒருவனிடம் ஏமாந்து போகிறாள் ஒரு பெண். அவள் இறக்கும்போது, தன்னைச் சீரழித்தவனைப் பழி வாங்கவேண்டும் என்று தன் மகனிடம் சத்தியம் வாங்கிக்கொள்கிறாள். தன் தாய்க்குச் செய்து கொடுத்த சத்தியத்தை நிறைவேற்ற, தன் அப்பாவைத் தேடிப் பழிவாங்கப் புறப்படுகிறான் மகன். வில்லனை எப்படிக் கண்டுபிடிக்கிறான்? எப்படிப் பழி வாங்குகிறான் என்பதுதான் கதை. ரஜினியின் தாயாக நடித்தவர் 'ஊர்வசி' விருது பெற்ற சாரதா. ஒரு கட்டத்தில் சத்யராஜ்தான் தன் அப்பா என்று ரஜினிக்கும், ரஜினிதான் தன் மகன் என்று சத்யராஜுக்கும் தெரிந்துவிடும். அப்புறம், அப்பாவுக்கும், அவரைப் பழி வாங்கத் துடிக்கும் மகனுக்கும் ஏட்டிக்குப் போட்டிதான். அந்தப் படத்தில் சத்யராஜும், ரஜினியும், சேர்ந்து நடித்த, 'என்னம்மா கண்ணு சௌக்கியமா?' என்ற பாடல் சூப்பர் டூப்பர் ஹிட் ஆனது.

# ரஜினி



ஒரு கட்டத்தில் ரஜினிக்கு வெற்றி என்றால், அடுத்த கட்டத்தில் சத்யராஜ் அவரை முந்திவிடுவார். இப்படி காட்சிக்குக் காட்சி படம் விறுவிறுப்பாக நகரும். சத்யராஜ், 'மிஸ்டர் பாரத்' படத்தில் வில்லனாக நடித்து, தம் அபாரமான நடிப்புத் திறமையை வெளிப்படுத்தினார்.

'நெற்றிக்கண்' போலவே, அழுத்தமான தந்தை - மகன் மோதல் படமான 'மிஸ்டர் பாரத்' வர்த்தக ரீதியில் வெற்றி பெற்ற ஒரு படம்.

ஒரு தயாரிப்பாளரைச் சிரம நிலையிலிருந்து கைதூக்கி விடும் நோக்கத்துடன் என்னை இயக்கச் சொல்லி ஒரு படத்தில் நடித்தார் ரஜினி. அந்தப் படம்...

ஒரு நாள் ரஜினி என்னிடம், ''சின்னப்பா தேவர் எவ்வளவு பெரிய மனிதர். மக்கள் திலகம் எம்.ஜி.ஆரை வைத்து இருபத்தைந்து படங்கள் எடுத்திருக்கிறார். ஒரு படம் ஆரம்பிக்கிறபோதே எப்போது படம் ரிலீஸ் என்று சொல்லிவிடுவார்.

# Vs சத்யராஜ்



தேவர் ஃபிலிம்ஸ் படங்களில் நானும் நடித்திருக்கிறேன். அவருக்கு என் மீது அன்பும் பாசமும் நிறைய உண்டு'' என்று சொன்னபோது, என் மனதுக்குள், 'எதற்காக இப்போது திடீரென்று தேவர் பற்றியும், தேவர் ஃபிலிம்ஸ் பற்றியும் ரஜினி பேசுகிறார்?' என்ற கேள்வி எழுந்தது.

நான் அந்தக் கேள்வியை ரஜினியிடம் கேட்பதற்கு முன்பாக அவரே, ''அப்படிப்பட்ட தேவர் ஃபிலிம்ஸ் கம்பெனி இன்று பிரச்னையில் இருக்கிறது.



அவர்களுக்கு ஒரு படம் நடித்துக் கொடுத்து உதவி செய்ய விரும்புகிறேன். அந்தப் படத்தை நீங்கள் இயக்க வேண்டும்'' என்று அன்புக்கட்டளை இட்டார். நானும் ஒப்புக்கொண்டேன்.

தேவர் அய்யா ஒரு சிறந்த தயாரிப்பாளர். அவரது முருக பக்தியைப் பற்றி நான் சொல்லித் தெரியவேண்டும் என்பதில்லை. படத்தில் கிடைக்கும் லாபத்தில் ஒரு பகுதியை மட்டும் தாம் வைத்துக்கொண்டு, மீதியை முருகன் கோயில் திருப்பணிகளுக்குக் கொடுத்துவிடுவார். ஒரு நாள் அவரது

**எஸ்.பி.முத்துராமன்**

படத்தின் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தபோது நான் சென்றிருந்தேன். ஒரு கோயில் செட். ஒரு மயில், வெளியிலிருந்து புறப்பட்டு நான்கு வாயிற்படிகளைத் தாண்டி, உள்ளே இருக்கும் முருகன் சிலையின் காலடிக்குப் போக வேண்டிய காட்சியை எடுத்துக்கொண்டிருந்தார்கள்.

''என் முருகன் என்னைக் கை விடமாட்டான்'' என்று சொல்லிவிட்டு, ''எல்லோரும் முருகா! முருகா!ன்னு குரல் கொடுங்க!'' என்றார்.

அனைவரும் 'முருகா! முருகா!' என்று குரலெழுப்ப, டைரக்டரிடம், ''நீ 'ஸ்டார்ட்' சொல்லப்பா!'' என்றார். கேமரா ஓடத் துவங்கியது. மயிலைத் தூக்கிப் பறக்கவிட்டார் ஒருவர். அது ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு வாயில்களையும் தாண்டி சரியாக முருகன் சிலையின் காலடியில் போய் உட்கார்ந்தது. அனைவருக்கும் ஒரே ஆச்சரியம்! அந்த அளவுக்கு முருகனின் அன்புக்குப் பாத்திரமானவர் தேவர் அய்யா.

நான் இயக்கிய 'ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது' என்ற படத்தின் பிரிவியூவுக்கு வந்திருந்த அவர், படம் முடிந்தவுடன் ''என்னென்னவோ புதுசா சொல்லி இருக்கீங்க! என்னை மாதிரி ஆளுங்களுக்கு இதுபோல படம் எடுக்கற தைரியம் கிடையாதுப்பா! நீங்க நல்லா வரணும்'' என்று வெளிப்படையாகப் பேசிப் பாராட்டினார். அவர் மனசு முருகன் மனசு!

தேவர் ஃபிலிம்ஸுக்காக நான் இயக்கிய படம் 'தர்மத்தின் தலைவன்'. அதில் ரஜினியுடன் இணைந்து நடித்தார் இளைய திலகம் பிரபு. ரஜினிக்குப் புது ஜோடியாக சுஹாசினி நடித்தார். பிரபுவுக்கு ஜோடியாக நாங்கள்



**ரஜினி மட்டும் தக்க நேரத்தில் உதவாமல் இருந்திருந்தால், 'தர்மத்தின் தலைவன்' படம் வெளிவருவது சிக்கலாகிப் போயிருக்கும்!**



* 'தர்மத்தின் தலைவன்'

தமிழுக்கு அறிமுகப்படுத்திய புதுமுகம்தான் குஷ்பு. அன்றைக்கு ஒரு தமிழ் எழுத்து கூடத் தெரியாமல், வசனங்களை ஆங்கிலத்திலும், இந்தியிலும் எழுதி வைத்துக்கொண்டு பேசிய குஷ்பு, இன்று தம் சொந்தக் குரலில் சினிமாவிலும் சின்னத்திரையிலும் கலக்கிக்கொண்டிருக்கிறார்!

அண்ணன் - தம்பி பாசத்தின் அடிப்படையில் அமைந்த கதைதான் 'தர்மத்தின் தலைவன்'. மறதி மன்னராக, நகைச்சுவை கலந்த பாத்திரம் ரஜினிக்கு.

* 'மிஸ்டர் பாரத்' - ரஜினி, சத்யராஜ்



ஒரு காட்சியில் வேட்டி கட்டிக்கொள்ள மறந்து, உள்-டிராயருடன் அவர் வீட்டை விட்டுப் புறப்பட்டுச் சென்று, நாய் துரத்தும் காட்சியில் தியேட்டரே அதிரும்.

'தர்மத்தின் தலைவன்' படத்தில் வில்லனாக நடித்தவர் நாசர். அவர் அப்போது திரையுலகுக்கு அறிமுகமாகியிருந்த நேரம். எனவே, ஸ்டன்ட் மாஸ்டர் விளக்கிச் சொல்லியிருந்தபோதிலும் அவரது முகத்தில் குத்து விழும்போது, அவர் தன் முகத்தைத் திருப்பிக்கொள்ள ஒரு வினாடி தவறியதால், பிரபு விட்ட குத்து நாசரின் மூக்கைப் பதம் பார்த்துவிட்டது. ரத்தம் கொட்ட, அவரை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று சிகிச்சை அளித்தோம்.

அந்தப் படத்துக்கு இசைஞானி இளையராஜா, 'தென் மதுரை வைகை நதி' போன்ற அற்புதமான பாடல்களை போட்டுக்கொடுத்தார். கடைசி கட்டத்தில், தயாரிப்பாளருக்குக் கைகொடுத்தவர் ரஜினிதான். அவர் மட்டும் தக்க நேரத்தில் உதவாமல் போயிருந்தால், படம் வெளியாவது சிக்கலாகி இருக்கும். அப்படி எதுவும் நேராமல், படம் ரிலீஸானது. தேவர் ஃபிலிம்ஸ் தயாரித்த ஓர் இந்திப் படத்தின் தோல்வியால் ஏற்பட்ட சிக்கலில் இருந்து அந்த நிறுவனத்தை மீள உதவ நாங்கள் நினைத்த அளவுக்கு முழுமையாக இல்லாதுபோனாலும், அவர்களுக்கு ஓரளவுக்காவது உதவ முடிந்ததில் எங்களுக்குத் திருப்தி.

ரஜினி ஒரு மாபெரும் மனிதர். அந்தப் பெயரிலேயே ரஜினி நடிக்க ஒரு படம் எடுத்தால்...?

*(பயணம் தொடரும்)*

எழுத்து வடிவம் : **எஸ்.சந்திரமௌலி**



* 'மிஸ்டர் பாரத்' - ரஜினி, அம்பிகா

''இது கொடுமை!'' என்றார் ஜகன். ''பாட்டு கத்துக்க வர்ற ஸ்டூடன்ட்ஸை இந்தக் காலத்து டீச்சர்ஸ் படுத்தற மாதிரி இருக்கு... நீ செய்யறது...! கோவைல் மாணவா நாலு வரி கம்போஸ் பண்ண வேண்டியது. அதை சிஷ்யர்களுக்குக் கத்துத் தந்து மேடையில் பாட வைக்க வேண்டியது, அப்புறம் யாராவது ஸ்பான்ஸரைப் பிடிச்சு சி.டியும் போட்டுக்க வேண்டியது...!''

நான் வாதாடவில்லை. மனைவியின் சின்னச் சின்னச் செயல்களுக்குப் பெரிய பெரிய அநர்த்தங்கள் கற்பிக்காத கணவர்கள் கணவர்களே இல்லை என்பதை, இருபத்தேழு வருட தாம்பத்யமும் உலக அனுபவமும் கற்றுத் தந்திருந்தன. சரவணனுக்கும் வைதீஸ்வரிக்கும் இங்கிலீஷ் டியூஷன் எடுக்கையில், அந்த உலக அனுபவங்களையும் கொஞ்சம் இழைத்துச் சேர்த்துக்கொள்ள முயன்று வந்தேன். அதன் விளைவுதான் 'வட்ட நிலா' பாட்டு. ஸ்கை, சர்கிள், மூன் போன்ற எளிய வார்த்தைகளைக்கூட, எழுத்துக் கூட்டிப் படிக்க இயலாமல் சரவணன் மூன்றாவதும் வைதீஸ்வரி எட்டாவதும் அடைந்திருந்தார்கள். இதற்காக தேவி அவர்களைப் போட்டு அடித்துத் தள்ளிக் கொண்டிருந்த ஒரு பின் மாலைப் பொழுதில், அந்தக் குழந்தைகளின் அலறல், எங்கள் இரண்டாவது மாடி ஃபிளாட்டில் மோதி அதிர்ந்தது. பொறுக்க முடியாமல் சாலையின் எதிர்ப்புறம் இருந்த கூரை வீட்டுக்குப் போய்க் கதவிடித்தேன்.

''பாருங்கம்மா!'' என்று ப்ராக்ரஸ் ரிப்போர்ட்டை எடுத்து நீட்டினாள் தேவி. இரண்டு குழந்தைகளும், ஏனைய பாடங்களில் எழுபதெண்பதுக்குக் குறையாமல் மார்க் வாங்கியிருக்க, ஆங்கிலத்தில் மட்டும் ஏழு, மூன்று என்று சிவப்பு மையில் அடிக்கோடிட்ட எண்கள் அவர்களுடைய வாழ்க்கைக்கே சவால் விட்டன.

''வாயக்கட்டி வயித்தக் கட்டிப் படிக்க வைச்சா இப்படிப் பண்ணுதுங்க...'' என்று மீண்டும் வைதீஸ்வரியின் முடியைக் கொத்தாகப் பிடித்தாள்.

சரவணனும் வைதீஸ்வரியும் ஆங்கில டியூஷனுக்கு, என்னிடம் வர ஆரம்பித்ததன் வரலாறு இதுதான். தேவி, அவர்களை அடிக்கக் கூடாது என்பதுதான் நான் கேட்ட ஃபீஸ். ஒப்புக்கொண்டாள். பட்டப் படிப்பில் நான் ஆங்கிலத்தை

# இங்கிலீஷ் டியூஷன்

முக்கிய பாடமாகப் பயின்றதைக் கேட்டுத் தெரிந்துகொண்டதும் அவள் முகத்தில் கூடுதல் திருப்தி. ''எப்படியாச்சும் பத்தாவது வர்றதுக்குள்ள, இங்கிலீஷ் மீடியமுக்கு மாத்திடணும்மா...'' - இது தேவியின் வாழ்க்கை இலட்சியம்!

**ப**ள்ளிக்கூடம் போல் வகுப்புகள் நடத்துவது சாத்தியமாயில்லை. அவர்



படை ஆங்கிலத்தைப் புகட்ட, தமிழின் உதவிகொண்டேன். ஆங்கில வார்த்தைகளைப் பதிய வைக்க, தமிழில் நான் இட்டுக்கட்டிய பாட்டு, இந்தக் குழந்தைகளுக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. தினமும் வகுப்புக்கு வந்ததும் ''வட்ட நிலா பாடுவமா?'' என்று சரவணன் ஆசையாய்க் கேட்கலானான். ''இன்னைக்கும் பேரீச்சம்பழம் தருவீங்களா?'' என்பதையும் மறக்காமல் உறுதிப் படுத்திக்கொண்டதும், இரண்டு பிள்ளை

• சீதா ரவி •

களும் இல்லாத நிலாவை நோக்கிக் கையசைத்து 'வட்ட நிலா வானிலே சுற்றிச் சுற்றி வருகுது' என்று அலுக்காமல் சலிக்காமல், ஒவ்வொரு நாளும் பாடியது எனக்கே ஆச்சர்யத்தைத் தந்தது. அலாதியான இன்பத்தைத் தந்தது. இதயம் போர்த்திக்கொண்ட அந்த இதத்தை

கணவரின் லேசர் சொற்களால் கூடத் துளைக்க முடியவில்லை!

இப்படியெல்லாம் உற்சாக முயற்சிகளை மேற்கொண்ட போதிலும், தேவியின் அபிலாஷையை என்னால் நிறைவேற்ற முடியாது என்றே தோன்றியது. இதற்குக் காரணம், குழந்தைகளின் ஆங்கில வாடையற்ற பின்னணி மட்டுமல்ல, அவர்களுக்குத் தரப்பட்டிருந்த பாடங்களின் கொடூரமான அபத்தமும்தான். ஒரு பாடமேனும் இந்தியச் சூழலில், வாழ்க்கை யதார்த்தங்களைப் பற்றியதாக இல்லை. இந்த லட்சணத்தில், ஏழைமையில் வளர்ந்த ஐந்து ஆங்கில சகோதரிகள் கிறிஸ்துமஸ் பண்டிகையைக் கொண்டாடியதைப் பற்றிய கதை வேறு! அந்த ஏழை விருந்தில், என்னென்ன ஐட்டங்கள் உணவாகின என்பது பாடத்தின் முடிவிலான கேள்வி! பேரீச்சம் பழத்தையே பெரிய அதிசயமாகப் பார்க்கும் என் மாணவர்களுக்கு, கேக், புட்டிங் என்று சர்க்கரை தோய்ந்த பெயர்களை, ஏழைவிட்டு உணவென்று விளக்குவதற்குள் கோபமும் குற்ற உணர்வும் என்னை வாட்டியெடுத்தன.




வாக்கியம் வாக்கியமாக அன்றி, வார்த்தை வார்த்தையாக மொழிமாற்றி விளக்கம் சொல்லும் முயற்சியில் ரொம்பவும் சோதனை தந்தது ஒரு வாக்கியம். தி ஃபைவ் கேர்ள்ஸ் லவ்ட் தெயர் மதர் டியர்லி! இந்த வாக்கியத்தை வைதீஸ்வரியால் படிக்க முடியவில்லை என்று நம்புவது, உங்களுக்குக் கஷ்டமாகக்கூட இருக்கலாம். ஆனால், 'தி' 'ஃபைவ்' ஐத் தாண்ட அவளால் முடியவில்லை.

ஐந்து பெண்கள் என்பதை விளக்குவது எனக்கும் கஷ்டமாக இருக்கவில்லை. 'லவ்ட் தெயர் மதர்' என்பதைத் தமிழில் தர முயன்றபோது வசமாக மாட்டிக் கொண்டேன்!

''அம்மா மேல அஞ்சு பொண்ணுங்களுக்கும் ரொம்ப பிரியம்...'' என்றேன்.

வைதீஸ்வரி என் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

''என்ன...?''

''ஒண்ணுமில்லே...''

''உங்களுக்கும் அம்மா மேலே பிரியம்தானே?''

''ம்...''

''ஆனா, அப்பப்போ அடிப்பாங்க...'' - இது சரவணன்.

''நீங்க தப்பு செஞ்சா கோபத்துல அடிப்பாங்க. அப்பா வந்து அடிக்கக் கூடாதுன்னு சொல்லித் தடுப்பாங்க இல்லே...'' என்று சமாதானப்படுத்த முயன்றபோதே, என் சொற்களின் பலவீனம் பல்லை இளித்தது.

''அப்பாவும்தான் அம்மாவைப் போட்டு அடிப்பாங்க...'' என்று

சரவணன் சொன்னபோது வைதீஸ்வரி தலைகுனிந்து கொண்டாள்.

எனக்குள் எழுந்த பச்சாதாபத்தை அழுத்தி உள்ளே தள்ளிவிட்டுத் தொடர்ந்தேன்.

''சரி 'லவ்'னா தெரியுமில்லே...?''

இரண்டு குழந்தைகளும் என் முகத்தைப் பார்த்தார்கள். பின் ஒருவரையொருவர் பார்த்துக் கள்ளச்சிரிப்புச் சிரித்துக்கொண்டார்கள்.

'அட விபரீதமே! எஃப். எம்மும் தொலைக்காட்சியும் புகட்டி வரும் போதையிலிருந்து, இந்தப் பிள்ளைகளும் தப்பவில்லையே' என்று விசனித்து ஆரோக்கிய பாதைக்கு அவர்கள் சிந்தனையைத் திருப்ப முயன்றேன்.

''சரவணா, நீ ஒரு நாய்க்குட்டி வளர்க்கறியே...''

''ஆமாம்... ஜிம்மி...''

''ஜிம்மிக்குச் சாப்பாடு குடுக்காம உன்னால சாப்பிட முடியுமா...?''

''உக்கும்...! நான்தான் டெய்லி ஜிம்மிக்கு சோறு வைப்பேன்'' முந்திக்கொண்டு பதில் சொன்னாள் வைதீஸ்வரி.

''சரி, நீ குட்டிப் பாப்பா - சின்ன பாப்பாவை எங்கயாவது பார்த்திருக்கியா...?''

''ஓ... பார்த்திருக்கோம் பார்த்திருக்கோம்... வனஜா சித்திக்கு ஒரு குட்டிப் பாப்பா இருக்கு...''

''மூணு மாசம்தான் ஆகுது அது பிறந்து'' என்று சின்ன விரல்களை விரித்துக் கணக்குச் சொன்னான் சரவணன்.

''சரி, புதுசா பிறந்த பாப்பாவைப் பார்த்தா உனக்கு எப்படித் தோணும்.. ஆ...சையா இருக்காதா...?'' என்று கேட்டேன். அதுவும் லவ்தான் என்று நிரூபிக்கும் அவசரத்தில்...

''அப்படியே அள்ளி அணைச்சுக்கணும்னு தோணும்'' என்றான் சரவணன் சிறிதும் யோசிக்காமல். அவன் பாரதியைப் படித்திருக்க நியாயமில்லை! ஆனால், அந்தச் சொற்கள் மிக இயல்பாய் மலர்ந்தன. சொற்களுக்கேற்ப அவனது வறண்ட கைகள் பூமியிலிருந்த கற்பனைக் குழந்தையை வாரி நெஞ்சில் சேர்த்துக் கொள்ள, அவனுடைய வட்ட நிலா கண்களில் அன்பு கசிந்து பிரகாசித்தது. வைதீஸ்வரி அவனைச் சந்தோஷமாகப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

பாழாய்ப் போகிற ஆங்கிலப் பாடம் எக்கேடு கெட்டால்தான் என்ன?... நெஞ்சுமுட்ட திருப்தியாய் இருந்தது எனக்கு. ●

உச்சிவெயில் மண்டையைப் பிளக்கிற சேலம் மாவட்டம் வேதநாயகபுரத்தில், கடற்பாசி வளருதுன்னு தகவல் கிடைச்சது. அடுத்த நாளே நாம் அங்கு ஆஜர்...

✱ ராஜேஷ்



# கடற்பாசி தரும் கலக்கல் கலெக்ஷன்!

தலை வாசல் அருகே இருக்கிறது வேதநாயகபுரம் கிராமம். அங்கே சோளக் கொல்லைகளுக்கு இடையே கடற்பாசி வளர்ப்பு கான்கிரீட் தொட்டிகள். ''மொதல்ல இதைக் கேள்விப்பட்டதும் ஆச்சர்யமா இருந்துச்சு. அப்புறம்தான் ராஜேஷ் அய்யா எங்களுக்கு இதை வெவரமா எடுத்துச் சொன்னார். கடல்ல அலையடிக்கிறாப்ல இந்தத் தொட்டித் தண்ணியில, அரை மணி நேரத்துக்கு ஒரு தடவை, நாங்க கையால அலையடிக்க வைச்சிட்டிருப்போம். அப்பப்ப கடற்பாசிகளுக்கு உணவுப் பொருட்களையும் தொட்டிக்குள்ளே போடுவோம். உணவைத் தின்னுட்டு ஜம்முனு வளருது!'' என்கிறார் கடற்பாசி உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் பெண் தொழிலாளி ஒருவர்.

''கடற்பாசிகள்ல இருபத்தியேழு வகைகள் இருக்குது. பதினாறு வகையான கடற்பாசிகள் மட்டுமே மருத்துவத்துக்கும், மனித உணவுக்கும் பயன்படுது. அதுல ஸ்பைரூலினா என்று அழைக்கப்படும் கடற்பாசி மருத்துவ பயன்பாட்டுக்கும், அதிக ஊட்டச்சத்து நிறைந்த துணை உணவுப் பொருட்களாகவும் பயன்படுது. பல ஆண்டுகளாகவே கடற்பாசிகள் கடலிலிருந்து எடுக்கப் பட்டு மருந்தாகவும், துணை உணவா கவும் பயன்படுத்தப்பட்டு வருது. இப்ப என்னாச்சுன்னா, உலகம் பூரா இதோட பயன்பாடு அதிகமாகிப் போச்சு. அதனால, கடற்பாசி வளர்க்குறதுல ஆராய்ச்சியாளர்கள் வெற்றி கண்டாங்க. அந்த அடிப்படையிலதான் நாங்க இங்க கடற்பாசி வளர்த்து வர்றோம்!'' எனச் சொல்கிறார் வேதநாயகபுரம் விவசாயி ராஜேஷ்.

''ஒரு தொட்டி இருநூறு சதுர அடி கொண்டது. இதைப் போல வரிசையா நெறைய தொட்டி கட்டிக்கலாம். ஒரு தொட்டியில நாலாயிரம் லிட்டர் தண்ணீர். ஆயிரம் லிட்டர் தண்ணீருக்கு, 'மதர் கல்ச்சர்' எனப்படும் தாய்ப் பாசி ஒரு கிலோ போடணும். பதினாறாம் நாள்லேர்ந்து அது பலன் தரத் துவங்கிடும். தொட்டியில இருக்கற தண்ணீரை மொண்டு, மெல்லிய சல்லடை மூலமா தொட்டியிலயே வடி கட்டணும். அப்ப, அடர் திரவநிலையில இருக்கற கடற்பாசி சல்லடையில தங்கிடும்.

அந்த அடர் திரவ கடற்பாசியை





* தாய்ப்பாசி

முறுக்கு அச்சல பிழிஞ்சு வெயில்ல காய வைக்கணும். நல்லாக் காய்ஞ்சதுக்கப்புறமா, அதை ரொம்ப நைஸ் பவுடராக் கணும். இதோட எங்க வேலை முடியுது. கடற்பாசி பவுடரைச் சுத்தமாக பேக் பண்ணி பெங்களூருக்கு அனுப்பிச்சுடுவோம். பதினாறு நாள்லேர்ந்து தொண்ணூறு நாள் வரைக்கும் தினமும் தொடர்ந்து கடற்பாசி எடுத்துக்கிட்டே இருக்கலாம். அப்புறமா அதே தொட்டிய சுத்தம் பண்ணிட்டு, திரும்பவும் கடற்பாசி வளர்க்க ஆரம்பிச்சுடலாம். கடற்பாசி அறுவடைய ஒவ்வொரு நாளும் தொடர்ந்து செஞ்சுக்கிட்டே இருக்கலாம்.

பெங்களூர்ல ஏர்சன் இன்டர்நேஷனல் நிறுவனம்தான், கடற்பாசி வளர்ப்பு குறித்து எனக்கு ஒரு வாரம் பயிற்சியளித்தது. அவங்களே எங்களுக்குத் தாய்ப்பாசி தர்றது மட்டுமில்லாமல், கடற்பாசிகளுக்கான உணவுப் பொருட்களையும் தர்றாங்க. கடற்பாசி பவுடரை அவங்களே கொள்முதல் பண்ணிக்கறாங்க. எல்லா செலவுகளும் போக மீதித் தொகையை நமக்குத் தந்திடறாங்க. நாம அனுப்பற கடற்பாசி பவுடரை பெங்களூர் நிறுவனம், சைனா மற்றும் வளைகுடா நாடுகளுக்கு ஏற்றுமதி பண்ணுது. ஆறு மாசமா, நண்பர்கள் நாலு பேர் சேர்ந்து இந்தத் தொழிலைச் செஞ்சு வர்றோம். நல்ல லாபம் தருது. ஒரு விவசாயிக்கு மாசா மாசம், கை நெறையுக் காசு பணத்தைக் கொண்டு வந்து சேர்க்கக் கூடியது இந்தக் கடற்பாசி வளர்ப்பு.

தமிழ்நாட்டோட வெயில் இதுக்குப் போதுமானது. சேலம் மாவட்டத்துல நாங்க மட்டும்தான் கடற்பாசி உற்பத்தி பண்றோம். திருவண்ணாமலையில இன்னொருத்தங்க பண்றாங்க. இப்படி தமிழ்நாட்டுல நாங்க ரெண்டு பேர் மட்டும்தான் கடற்பாசி உற்பத்தி பண்றோம். இது தமிழக விவசாயிகளுக்கு ரொம்பவே புதுசு'' என்று கூறுகிறார் ராஜேஷ்.

செய்திச் சித்திரம்:

**இருள்நீக்கியான்**

# கூலா சாப்பிடுங்க

எறும்பிலிருந்து மனிதர்கள் வரை இனிப்பு சாப்பிடுவது என்றால் யாருக்குத்தான் இஷ்டமில்லை? முன்பெல்லாம் பண்டிகைகளின்போது மட்டும்தான் இனிப்புகள் சாப்பிடுவார்கள்.

இப்போது? தெருவுக்குத் தெரு ஸ்வீட் கடைகள்.

ஆக, எப்போது வேண்டுமானாலும் பிடித்த ஸ்வீட்டை வாங்கிக்கொள்ள முடிவதால் வருடம் பூராவுமே தீபாவளிதான், கொண்டாட்டம்தான்.

அது மட்டுமா? குழந்தை பிறப்பதிலிருந்து, வீட்டு லோன் ஸாங்ஷன் ஆனது வரை எல்லாவற்றுக்கும் இனிப்பு வாங்கிக் கொண்டாடுகிறோம். ஆனால், இனிப்பு சம்பந்தமான கசப்பான சில தகவல்கள். இதோ...

ரஸகுல்லா, ஜாங்கிரி, மைசூர்பாகு இப்படி நமக்குப் பழக்கமான பலவகை இனிப்புகளும் 'ஜன்க் ஃபுட்' என்ற பிரிவைச் சேர்ந்தவைதான். ஒரு மைசூர்பாக்கில் சுமார் 500 கலோரிகள் உள்ளன. அதாவது இரண்டு மைசூர்பாக் சாப்பிட்டால் அந்த வேளைக்கான முழு உணவைச் சாப்பிட்டதற்குச் சமம்.

கடலை மாவு, நெய் இவற்றோடு கிட்டத்தட்ட சம அளவில் சர்க்கரை கலந்துதான் இவை தயாரிக்கப்படுகின்றன.

ஒரு ஸ்பூன் சர்க்கரையில் 200 கலோரி உண்டு. சர்க்கரையும் இறுதியில் கொழுப்பாகத்தான் நம் உடலில் சேர்கிறது. உடலில் சர்க்கரை அதிகம் சேரச் சேர மேலும் மேலும் அதிக இன்சுலின் சுரக்கிறது. ஒரு கட்டத்தில் தொடர்ந்து அதிக அளவில் இன்சுலினைச் சுரந்து சுரந்து கணையம் (பான்க்ரியாஸ்) களைப்படைந்துவிடுகிறது. இன்சு



## மில்க் சாலட்

பால் பாயசம் – 1 கப்

பச்சை திராட்சை – 10

கறுப்புத் திராட்சை (விதைகளற்றது) – 10

ஆப்பிள் – 4 துண்டுகள்

பைனாப்பிள் – 4 துண்டுகள்

வாழைப்பழம் – 1

முந்திரிப் பருப்பு – 2 டீஸ்பூன்

பழங்கள் அனைத்தையும் நன்கு கழுவ வேண்டும். ஆப்பிள், பைனாப்பிள், வாழையைச் சிறிது சிறிதாக நறுக்கவும். பால் பாயசத்தை நன்கு சூடாக்கவும். அதில் திராட்சை, ஆப்பிள், பைனாப்பிள், வாழையைச் சேர்த்துக் கிளறவும். அதை ஒரு கிண்ணத்தில் வைத்து, அதன் மேல் பருப்புகளைப் போட்டு அலங்கரிக்கவும். சத்தான மில்க் சாலட் தயார்.

டாக்டர் எம்.ராஜேந்திரன்

வின் குறைவாகச் சுரக்கத் தொடங்க, நீரிழிவு நோய்.

வீட்டிலேயே செய்யக்கூடிய சத்து மாவு, பொரிமாவு போன்றவற்றைச் சாப்பிடலாமே. பொதுவாக, இவற்றில் ஒன்றிரண்டு சொட்டு நெய்தான் விடுவார்கள். அதுகூட சேர்மானத் துக்காகதான். அதிரசத்தில்கூட மாவுடன் வெல்லம்தான் கலக்கப்படுகிறது.

இனிப்பின் வேண்டாத விளைவுகளைத் தெரிந்துகொண்டுதான், நிறைய இனிப்பு களை உள்ளே தள்ளக்கூடிய தீபாவளியன்று, மருந்து என்கிற வஸ்துவையும் சாப்பிடச் சொன்னார்கள்.

இப்போது 'எஸ்.கே.சி' என்கிற பதம் மிகவும் பிரபலமாகிவிட்டது. அதாவது ஸ்வீட்-காரம்-காஃபி. ஹோட்டல்களில்கூட இந்தப் பெயரிட்டே செட்டாக விற்கத் தொடங்கிவிட்டார்கள்.

'அதற்காக என்ன சொல்றீங்க? சர்க்கரை நோய் வந்து தொலைக்காதபோதே ஸ்வீட் சாப்பிடுவதை முழுசா கட் பண்ணிக்கச் சொல்றீங்களா?' என்று பதற வேண்டாம். அளவோடு சாப்பிடுங்கள். ஓர் இளை ஞனுக்கு ஒரு நாளைக்கு 2,400 கலோரி போது மானது. அதேபோல இளம் பெண்ணுக்கு 2,200 கலோரி.

அதிகப்படியான கலோரிகளை எரிப்பது கஷ்டமல்ல. 'வாக்கிங், ஜாக்கிங் போர்' என் பவர்கள் ஸ்கிப்பிங் செய்யலாம். இதற்கும் முகம் சுளிப்பவர்கள் டான்ஸ் ஆடலாமே.

பிஜி தீவுக்கருகில் வைரச் சுரங்கங்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அப்போது அதை ஆண்ட பிரிட்டிஷ்காரர்கள் அங் குள்ள இந்தியர்களைச் சுரங்கம் தோண்ட பயன்படுத்திக் கொண்டார் கள். இதற்காகக் கணிசமான தொகை அவர்களுக்கு வழங் கப்பட்டது. இதனால் அவர் கள் மனம் போன போக்கில் சாப்பிடத் தொடங்கினார் கள். அடுத்த முப்பது வரு டங்களில் கிட்டத்தட்ட அவர்கள் எல்லோருக்குமே இதயநோய்கள் ஏற்பட்டன. சர்க்கரை நோயும் கூடுதல் இணைப்பாக சேர்ந்துகொண்டது. அது அடுத்த தலை முறைக்கும் தொடர்ந்தது...

நாமாவது இனிப்பில் அளவைக் கடைப் பிடித்து நம் வாரிசுகளுக்கு வேண்டாத 'சொத்துகளை' வைத்துவிட்டுப் போகாமல் இருக்கலாமே!

(தொடரும்)



# கசக்கும் இனிப்பு!

எழுத்து வடிவம் - ஆதர்ஷ்

சேனல்

தொலைக்காட்சி நிறுவனங்கள் போட்டி போட்டுக்கொண்டு செய்திகளுக்கென்று தனி சேனல் ஆரம்பிக்கின்றன. ஆனால், அவை வழங்கும் செய்திகளின் நம்பகத்தன்மை என்ன? அதில் செய்ய வேண்டிய மாற்றங்கள் என்ன? எப்படியெல்லாம் செய்திகள் தருதல் நலம் என்பது குறித்து அறிய களமிறங்கினோம்.



**துரைராஜ் :** கலைஞர் மற்றும் அவரது குடும்பம் தொடர்பான செய்திகள் சலிப்பூட்டுகின்றன. கட்சிகள் சார்ந்த செய்திகளே கலைஞர் செய்தியில் அதிக இடம் பிடிக்கின்றன. சன் டி.வி.யின் டிட்டோவாக இருக்கிறது. டெவலப்மென்ட் கம்யூனிகேஷன் ரீதியிலான செய்திகளை, இதில் காண்பது அரிதாக இருக்கிறது.






**சக்கரவர்த்தி :** செய்தியில் நம்பகத்தன்மை என்பது இன்று வரை பொதிகை சேனலுக்குத்தான் உள்ளது. கேட்கும் ஆர்வத்தைத் தூண்டுகிற வகையில் செய்திகள் அமையாதது மிகப் பெரிய குறை. மத்திய அரசு சார்ந்த செய்திகள் அதிக அளவில் ஆக்கிரமிப்புச் செய்யாமல் இருந்தால், சலிப்புத் தட்டாது.



**அமர்நாத் :** ஆளுங்கட்சியைச் சீண்டுவதில் நேரத்தை வீணடிக்காமல் இருந்தால், ஜெயா செய்திகளைச் சிறந்த செய்திகள் என்று சொல்லலாம். ஜெயலலிதாவின் அறிக்கையை முழுசாக, மூச்சுவிடாமல் படிப்பதில், நேரம் விரயமாகிறது. ஜெயா செய்திகளில் வரும் 'இன்று', 'காலச்சுவடுகள்' ஆகிய பகுதிகள் பயனுள்ளவை.




# செய்திகள் - விமர்சிப்பது






**சார்லஸ் :** ஒவர் பந்தா இல்லாமல், சிம்பிளா இருக்கறது ராஜ் நியூஸ்தான். நடுநிலையை யொட்டி, எல்லோருக்கும் அப்பீல் ஆகற மாதிரி இருந்தாலும், லேட்டஸ்ட் விஷயங்களுக்கு ராஜ் நியூஸ்ல, இன்னும் முக்கியத்துவம் கொடுக் கணும். செய்திவாசிப்பாளர்கள் ஏதோ ஒரு இறுக்கத்துடன் படிப்பது ஏன்?






**ஸ்ரீவத்சன் :** சன் நியூஸ் கட்சி சார்பு இப்போதைக்கு இல்லாதது மாதிரி தெரிந்தாலும், முழுசா விலகினது மாதிரி தெரியல. சினிமா, அரசியல் இந்த ரெண்டையும் தாண்டி எவ் வளவோ விஷயங்கள் இருக்கு. கடைக்கோடிக் குடிமகனின் பிரச்னைகளையும் செய்திகள் பிரதிபலிக்கணும்.






**சுரேந்தர் :** மக்கள் தொலைக்காட்சி செய்திகளில் கட்சி சார்பற்றதுபோல் ஒரு மாயத் தோற்றம் உருவாக்கப்பட்டுள்ளது. ராமதாஸ், அன்பு மணி குறித்த செய்திகளுக்கு அதிக முக் கியத்துவம் தருவதை அவர்களாலும் மறுக்க முடியாது. ஆனால், அவர்களின் தமிழ் முயற்சியும், மக்கள் நலன் சார்ந்த சிறப்புச் செய்திகளும் பாராட்டுக்குரியவை.






**கருப்பையா :** பி.பி.ஸி.யைப் பார்க்கிறபோது ஒன்று தெளிவாகிறது. செய்தியின் ஆழம், கொடுக்கும் தகவல்கள், வழங்கும் விதம் இந்த மூன்றிலும் மிகவும் பின் தங்கிய நிலையில் தமிழ் சேனல்கள் இருக்கின்றன. ஆங்கிலச் சேனல் செய்திகளோடு ஒப்பிடும்போது கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்களும் போக வேண் டிய தூரமும் இன்னும் நிறைய இருக்கின்றன.

# சேனல் பிரியர்கள்!

- எம்.திரவிய முருகன்

திடீரென்று உலகம் அழகாகிவிட்டது. கால்கள் தரையில்தான் நிற்கின்றன. ஆனால், உணரமுடியவில்லை. பஞ்சுப் பொதி வாகனத்தில் மிதப்பது போலிருக்கிறது. காதுகளுக்குள் கொய்ய்ய்ங் என்று ஒலிக்கும் சத்தத்தை உற்றுக்கேட்டால் சங்கீதமாக இருக்கிறது. இன்றைய தினம் இறைவனால் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறது.

பத்மநாபன் தன் ஆகச் சிறந்த ஸ்டைல் நடை போட்டு வேகவேகமாக வீட்டை நெருங்க, வளர்மதி அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

''ஐயே, என்னடா இது உரிச்ச கோழி யாட்டம் வர்றே?'' என்று கேட்டாள்.

அப்போதுதான் அவனுக்கு உறைத்தது. சே, இனிமேல் குளிக்கப்போகும்போதும் சட்டையுடன் செல்ல வேண்டும். ஒரு கணம்தான். வெட்கம் வந்துவிட, ஈரத் துண்டை எடுத்து உதறி, விரித்து சால்வை போல் போர்த்திக்கொண்டு சிரித்தான்.

''என்ன வளரு? லெட்டர் படிச்சியா?''

''அடச்சே, ஒனக்கு வேற வேலையே இல்ல. என் சயின்ஸ் புக்க பொற்கொடி எடுத்துட்டுப் போயிட்டா. வீட்டாண்ட போயி கேட்டா, அவங்க மாமா வீட்டுக்குப் போயிருக்கான்றாங்க. உன் புக்க குடேன். நாளைக்கு க்ளாஸ்ல குடுத்துடறேன்.''

சாத்தியங்கள் அநேகம். சந்தர்ப்பங்கள்

## ஜிலு ஜிலு தொடர்கதை - 4



# கால் கிலோ காதல் அரை கிலோ கனவு

## பா.ராகவன்

அநேகம். ஆயினும் நானூறடி நடந்து தன் வீடு தேடி வந்து புத்தகம் கேட்க வேறென்ன காரணம் இருந்துவிட முடியும்?

''வளர்மதி, சீக்கிரம் சொல்லிடேன். நீயும் என்ன லவ் பண்றதானே?''

அவள் முறைத்தாள். ''எப்பப் பாரு கெட்ட பேச்சு பேசாதடா குடுமி. எங்க தாத்தாவாண்ட சொல்லியிருந்தேன்னா என்னாயிருக்கும் தெரியுமில்ல?''

தெரியும். தோலை உரித்திருப்பார் அப்பா. விஷயம் வீடு வந்துசேருவதற்குள் பிரம்பு அவன் முதுகு வந்து சேர்ந்திருக்கும். வளர்மதியைப் போன்ற ஓர் உத்தமி, அம்மாதிரியான நெருக்கடிகளுக்குத் தன் தோழர்களை உள்ளாக்குவதில்லை.

''ரொம்ப தேங்ஸ் வளர்மதி. ஆனா என்னோட லவ், எவ்ளோ புனிதமானதுன்னு ஒனக்கு மொதல்ல நான் விளக்கிச் சொல்லணும். அப்பத்தான் புரியும்.''

''திரும்பத் திரும்ப அதையே பேசினா இப்பவே உங்கப்பாவாண்ட சொல்லிடுவேன்.''

''ஐயோ... வேண்டாம். இரு ஒரு நிமிஷம்'' என்று வேகமாக உள்ளே ஓடினான். அறிவியல் புத்தகத்தைத் தன் பள்ளிப்பையில் தேடினான்.

''யார்றா அது ஒன்னோட படிக்கறவளா?''

அப்பா. கவனித்திருக்கிறார்.

''அ... ஆமாப்பா. என் க்ளாஸ்ல செகண்ட் ரேங்க் வாங்கற பொண்ணு.''

''நீ எங்க போயி மேஞ்சிட்டு வர்ற?''

''பண்ண தோப்புல குளிக்கப் போயிருந்தேம்பா..''

''ஊர் சுத்தாம படிக்

கணும். புரியுதா?''

''சரிப்பா.''

அறிவியல் புத்தகத்தை அள்ளிக் கொண்டு வேகமாக வாசலுக்கு விரைந்தான். வீட்டில் அப்பா இல்லா திருந்தால் அம்மாவிடம் சில சலுகைகள் எடுத்துக்கொள்ள இய லும். வா வளரு. உள்ளே வா. இங்க உக்காரு. அம்மா, என் ஃப்ரெண் டும்மா. காப்பி குடுக்கிறியா?

கேட்கலாம். கிடைக்கும். தன் விருப்பம் அல்லது விருப்பமின் மையை அம்மா வெளிக்காட்ட மாட்டாள். அப்பா இருக்கும்போது அது சாத்தியமில்லை. 'கழுத ஒனக்குப் போடறதே தண்டச் சோறு' என்று அவன் எதிரிலேயே மானத்தை வாங்கிவிடுவார்.

புத்தகத்துடன் அவன் மீண்டும் வெளியே வந்தபோது வளர்மதி செம்பருத்திச் செடி அருகே நின்று கொண்டிருந்தாள்.

''அழகா இருக்கு'' என்றாள்.

''எங்கம்மாதான் வெச்சாங்க. டெய்லி ரெண்டு மூணு பூக்கும்! ஒனக்கு வேணுமா?''

அவள் முகத்தில் இருந்த பரவசம் அவனுக்கு மகிழ்ச்சியளித்தது. அவள் கேட்பதற்கு முன்பே ஓடிச்சென்று இரண்டு பூக்களைப் பறித்து அவளிடம் நீட்டினான்.

''இத ரோஜாவா நெவச்சிக்க வளரு.''

முறைத்தாள். ''நீ இப்பிடியே பேசினன்னா நான் உன்னோட பேசவே மாட்டேன்டா குடுமி'' என்று சொன்னாள்.

''அப்பாடிச் சொல்லாத வளரு. நான் பொய் சொல்லல. எதையும் மறைக்கல. நீ என்ன செஞ்சாலும் பரவால்லன்னுதானே நேர்ல சொல்லுறேன்?''

''எனக்குப் புடிக்கல. நான் நல்லா படிக்கணும். டாக்டரா ஆவணும்னு எங்க தாத்தா சொல்லியிருக்காரு. லவ்வு கிவ்வுன்னு பேசினன்னா உன்னோட பளகவே மாட்டேன்.''

அவன் அதிர்ச்சியடைந்தான். ''ஐயோ. அப்பிடியெல்லாம் சொல்லிடாத வளரு. நீ பேசலன்னா நா செத்தே போயிருவேன்!''

கண்கள் ததும்பிவிட்டிருந்தன.

''சே, என்னடா அசிங்கமா அளுதுக்கிட்டு. கண்ணைத் தொட'' என்றாள். அவன் கையிலிருந்து புத்தகத்தை வெடுக்கென்று அவளே பிடுங் கிக்கொண்டாள்.

''புக்க குடுக்க எவ்ளோ நேரம்? வந்து படிக்க உக்காருன்னு சொன்னேன்ல?''

அப்பாதான். வாசலுக்கே வந்துவிட்ட வில்லன் வில்லாளன்.



வளர்மதி அவரை நிமிர்ந்து பார்த்தாள். ''வணக்கம் சார்'' என்று சொன்னாள்.

''ஆங், ஆங். என்ன படிக்கற?''

''பத்மநாபன் க்ளாஸ்தான் சார்.''

''எத்தினியாவது ரேங்க் வாங்குற?''

''செகண்ட் ரேங்க் வரும் சார்.''

''யாரு ஃபர்ஸ்ட் ரேங்க்கு வாங்குவாங்க?''

''பன்னீரு சார்.''

'உம்ம்' என்றார். சட்டென்று ''இவன் எத்தன வாங்குவான்?''

வளர்மதிக்கு ஒரு கணம் பேச்சு வரவில்லை. பத்மநாபனைத் திரும்பிப் பார்த்தாள். அவன் தீயில் நிற்பது போல் உணர்ந்தான்.

''கேட்டனே, காது கேக்கல? நீ செகண்ட் ரேங்கு. இவன் எத்தினியாவது ரேங்கு?''

''ஒ... ஒம்போது.. பத்து வருவான் சார்.''

''ம்ம்... கேட்டுக்கடா... பொட்டச்சி செகண்ட் ரேங்க். வெக்கமா இல்ல?''

'என்னைவிட அவள் நன்றாகப் படிக்கிறாள். நானும் முயற்சி செய்தால் செகண்ட், ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்கிவிட்டுப் போகிறேன். முடியாதா என்ன? அவசியம் முடியும். வளர்மதி தன் காதலை ஏற்றுக்கொண்டுவிடுகிற பட்சத்தில்

இன்னுமேகூட சீக்கிரமாக முடியலாம்.'

''எப்பப் பாரு பசங்களோட சேர்ந்துக்கிட்டு மாங்கா அடிக்கப் போவுறது, கெணத்துல குதிச்சி கும்மாளமடிக்கப் போவுறது, தியேட்டருக்குப் போவுறதுன்னு அலுலயே இரு. உக்காந்து எப்பப் படிக்கற நீயி?''

''எல்லாம் படிக்கறேன். ஆங்...'' என்றான் மெல்லிய முறைப்புடன்.

''கிழிச்ச'' என்றார் அப்பா.

வளர்மதி சிரித்தாள். அதுவும் எரிச்சல் தந்தது.

''சரி சொல்லு. பலபடிச் சமன்பாடுகளின் மூலம் எது? விகிதமுறு எண்களா? விகிதமுறா எண்களா?''

பத்மநாபன் விழித்தான். படித்த மாதிரிதான் இருக்கிறது. மதியச் சாப்பாட்டுக்குப் பிறகான உடனடி மகாலிங்க வாத்தியார் வகுப்புகள், பொதுவில் அரைகுறையாகத்தான் மனத்தில் விழும். கண்கள் சொருகும் நேரத்தில் இம்மாதிரியான இசகுபிசகுகள் நேர்ந்துவிடுகின்றன. விகிதமுறு எண்கள். விகிதமுறா எண்கள். பகு எண்கள். பகா எண்கள். படுத்தும் எண்கள். பாவி எண்கள்.

''நீ சொல்லும்மா. ஒனக்குத் தெரியுமா?'' வளர்மதியைப் பார்த்துக் கேட்டார் அப்பா. வளர்மதி அவனை ஒரு கணம் பார்த்தாள்.

''எல்லா விகிதமுறா எண்களையும் பலபடிச் சமன்பாட்டோட மூலமா பாக்க முடியும் சார்'' என்று சொன்னாள். ''சமன்பாட்டோட கெழு விகிதமுறு எண்ணா இருந்தாலும் மூலங்கள் விகிதமுறா எண்ணாத்தான் சார் வரும்.''

''போடு. நீ படிக்கற புள்ள. இவனப் பாரு. திருவிழால திருடவந்தவன தேள் கொட்டினாப்புல முழிக்கறதப் பாரு.''

பல்லைக் கடித்தபடி அவன் காதைப் பிடித்துத் திருகியபடியே கையை உயர்த்தினார்.

வலித்தது. வளர்மதி பார்த்துக்கொண்டிருந்தபடியால் வந்த வலி. கண்ணில் நீர் நிறைந்துவிட்டது. இதற்குமேல் பெரிய அவமானம் என்று ஏதும் இருந்துவிட முடியாது.

''நான் போயிட்டு வரேன் சார்'' என்று வளர்மதி சொன்னாள். பார்வை அவன்மீதே இருந்தது. அதில் பரிதாபம் தெரிந்தது.

''டயம் கிடைச்சா இவனுக்குக் கொஞ்சம் சொல்லிக்குடும்மா. பொட்டச்சி ஒனக்குத் தெரிஞ்சதுல கால்வாசி தத்துக்கறானா பாப்பம்.''

வளர்மதி இரண்டடி நடந்தாள். என்ன தோன்றியதோ சட்டென்று நின்றவள், திரும்பி, ''பொட்டச்சின்னு சொல்லாதீங்க சார். பொண்ணுன்னு சொல்லுங்க'' என்று சொல்லிவிட்டு வேகமாகப் போய்விட்டாள்.

பத்மநாபனின் அப்பா அதிர்ச்சியடைந்துவிட்டார். அவளை வியப்புடன் திரும்பிப் பார்த்தார்.

பத்மநாபனுக்கு சிறு சந்தோஷம் ஏற்பட்டாற்போலிருந்தது.

**(தொடரும்)**

## தூங்காமல் ஒரு சாதனை!

முற்றிலும் பார்வையற்றவர்களையே கொண்ட கோமகனின் ராகப் பிரியா இசைக்குழு தொடர்ந்து ஐம்பது மணி நேர இசை நிகழ்ச்சியை நடத்தி, உலக சாதனை புரிந்திருக்கிறது. அந்தக் குழுவின் தலைவர் கோமகன், "50 மணி நேரத்தை மூன்று மணி நேர பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு, இசை அமைப்பாளர்கள், பாடகர்கள், ஹீரோக்கள் வாரியாக பாடல்களைத் தேர்ந்தெடுத்துப் பாடினோம். ஆறு பாடகர்கள், நான்கு பாடகிகள், 15 இசைக் கலைஞர்கள் பங்கு கொண்டோம். மூன்றாவது நாள் அதிகாலை, மூன்று மணி முதல் ஆறு மணி வரை எங்களுக்குத் தூக்கம் இல்லாத காரணத்தால் மிகவும் சோர்வாக இருந்தது. இதை எதிர்பார்த்து அந்தச் சமயத்துக்கென கானா மற்றும் குத்துப் பாடல்களை ஒதுக்கி வைத்திருந்தோம். ரசிகர்களின் ஆட்டமும், பாட்டமும் எங்கள் தூக்கத்தைப் போக்க உதவியது. எங்கள் சாதனை அறிவிக்கப்பட்டபோது, அத்தனை பேரும் சந்தோஷத்தில் அழுதுவிட்டோம்" என்கிறார்.

– மானஸா

# சந்தோஷ் சுப்ரமணியம்

சந்தோஷமாய் ஒரு படத்தை இரண்டரை மணி நேரம் பார்க்க முடியுமா? அதுவும் இன்றைய காலகட்டத்தில்! 'முடியும்' என்று நிரூபித்திருக்கிறார்கள். முதல் ரீலில் தொடங்கி, படம் முடியும் வரை கலாட்டா கலக்கல்தான். குழந்தைகளைக் கைப்பிடித்து வளர்க்க ஆசைப்படும் அப்பாக்கள், அவர்கள் வளர்ந்த பிறகும் கையை விடுவதில்லை என்பதுதான் கான்செப்ட். இதனை வெகு அழகாக, ஜெனிலியா என்னும் மயிலிறகு கொண்டு வருடிச் சொல்லியிருக்கிறார்கள்.

ஜெயம் ரவி ஜிலீர் பட்டாசு. நண்பர்களிடம் அப்பாவைப் பற்றிப் புலம்புவதும், அப்பாவிடம் பெட்டிப் பாம்பாய் மருகுவதும் 'அடடா' ரகம். உணர்வுகளைக் கண்களாலேயே வெளிப்படுத்தும் பிரகாஷ்ராஜ், தன் மகனது உணர்வுகளைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டோமோ என்று வருந்தும் போது உள்ளம் தொடுகிறார். ஜெனிலியாவின் அழகும் இளமை கொப்பளிக்கும் நடிப்பும் படத்துக்கு மிகப்பெரிய பலம். அவர் வளவளவென பேசும்போதும் சரி, பேசாமலே மௌனம் சுமக்கும்போதும் சரி... பேசிக்கொண்டே இருக்க மாட்டாரா என்று ரசிகனுக்குத் தோன்றுவது கதாபாத்திர வெற்றி. ஷாயாஜி ஷிண்டேவின் அலம்பல் அதகளம். சந்தானம் அண்ட் கோ காமெடி தர்பாரே நடத்தி விடுகின்றனர்.

முதல் பாதி கதை, எதை நோக்கிச் செல்கிறது என்று குழப்பம் ஏற்பட்டாலும், ஜெட் வேக திரைக்கதை எல்லாவற்றையும் மறக்கச் செய்து விடுகிறது. சின்னச் சின்னக் கதாபாத்திரங்களைக்கூட அழகாய் கட்டி ஆண்டுள்ளார் டைரக்டர் ராஜா.

தேவிஸ்ரீ பிரசாத் இசையில் பாடல்கள் மனம் வருடுகின்றன. கண்ணனின் ஒளிப்பதிவில் உயிரோட்டம் அதிகம். நீளமாய் இருந்தாலும் நிறைவான வசனங்கள். கோடைக்கேற்ற குளிர் இளநீர் சந்தோஷ் சுப்ரமணியம்!

– மிருதுளா

வட்டமேஜை



# ஸ்டைலா... ஸ்மார்ட்டா... கலக்கல்..!

ஒகேனக்கல் குடிநீர் திட்டத்தை, தமிழக முதல்வர் தற்காலிகமாக நிறுத்தி வைத்த சூட்சுமத்தைக் காட்டுகிற கார்ட்டூன் மிக அருமை!

- இரா.சக்கரபாணி, மதுரை

ஸ்டைலா, ஸ்மார்ட்டா சிரிக்கும் நரேந்திரர் (மோடி) வெளியே; ஸ்வீட்டா 'போஸ்' கொடுத்துக்கொண்டு அழகரும் சொக்கரும் உள்ளே! அதிக பக்கங்கள்; அதே விலை! சித்திரைச் சிறப்பிதழில் கலக்கிட்டே கல்கி!

- கோதை, சென்னை-4

ஷக்தி சிதம்பரம் பேட்டியில் எதிர்பார்த்த, எதிர்பாராத கேள்விகளும் பதில்களும் சூப்பர்ப்!

- எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை - 109

கல்கி 20.4.2008 இதழில் 'சமஸ்கிருதம் படித்தால் சூப்பர் சம்பளம்' என்ற செய்தியைப் படித்தேன். அதில் இடம்பெற்றுள்ள கருத்துகளைக் கூறிய ராமச்சந்திரன் என்பவர், ஸமஸ்கிருத பாரதி என்ற அமைப்பைச் சேர்ந்தவர். தாங்கள் வெளியிட்டிருப்பது போல் சமஸ்கிருத சமிதி அல்ல. அது சரி, ஸமஸ்கிருதம் என்று வடமொழி முதலெழுத்துடன் அச்சிடாமல் சமஸ்கிருதம் என்று வெளியிட்டது ஏனோ?

- எஸ்.அனந்தராமன், சென்னை - 40



## ஸ்பீட் போஸ்ட்

ஏற்கெனவே த.மா.கா.வை நடத்திய அனுபவம் வாசனுக்கு உண்டு. அந்தத் தவறை மீண்டும் செய்ய மாட்டார் என்றே கருதுகிறேன்.

- மு.அய்யூப்கான், கும்பகோணம்-1

'கண்ணனைத் தேடி' எங்கும் போக வேண்டாம்... கல்கியில் படியுங்கள் வேளுக்குடி க்ருஷ்ணன் ஸ்வாமிகளின் கட்டுரையை!

- லலிதா செல்லப்பா, பம்மல்

தொகுதி வளர்ச்சி நிதியிலிருந்து கோயில் திருப்பணிகள் செய்த தொகுதி எம்.எல்.ஏ. கௌஸ் பாட்சாவின் முன்னேற்றத்துக்கு அன்னை மீனாக்ஷி அன்புடன் துணை இருப்பாள்.

- தர்மன்பெரியசாமி, சென்னை -116

'மீனாக்ஷிக்கு மங்களம்' மூலம் மதுரை சித்திரைத் திருநாளை நேரில் பார்த்த திருப்தி ஏற்பட்டது.

- ஆர்.பிருந்தா இரமணி, மதுரை



# காதைத் திருகும் மருத்துவம்!

"இன்னைக்குக் கிழக்கு - மேற்கத்திய நாடுகள்ல அபார வரவேற்பைப் பெற்றிருக்கிற அக்குபஞ்சர் சிகிச்சை, சீனாவிலிருந்து இறக்குமதியானதா நினைக்கறாங்க! ஆனா, இது தமிழ்நாட்டிலிருந்து சீனாவுக்குப் போன பழந்தமிழ் வைத்தியமுறை!'' என்று ஆச்சரியத் தகவலை முன்வைக்கும் டாக்டர் எம்.முத்துக்குமார், விஜயா சுகாதார மையத்தின் அக்குபஞ்சர் யூனிட்டின் இயக்குநராக இருக்கிறார்.

''மெலிந்த தேகம்; வெள்ளைத் தாடியுடன் தென்னிந்தியாவிலிருந்து வந்த 'போயாங்' என்பவர் அறிமுகப்படுத்திய முறை!' என்று சீனாவிலேயே எழுதி வைச்சருக்காங்க. அந்த 'போயாங்' வேறு யாருமில்லே. வர்மக் கலையைப் பிரபலப்படுத்திய நம்ம தமிழ்நாட்டு மகாசித்தர் 'போகர்'தான்! 'அக்குபஞ்சர்' என்றால் 'ஊசி யால் துளையிடுதல்'னு அர்த்தம்!

மற்ற மருத்துவத்தால கைவிடப்பட்டவங்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம் என்பது தான்! அப்படிப்பட்ட 30,000 நபர்களைக் குணப்படுத்தி இருக்கிறோம்!'' என்று மேலும் ஆச்சரியம் தருகிறார்.

''நம்ம உடம்புக்குள் ஆயிரக்கணக்கான அக்குப்புள்ளிகள் இருக்கின்றன. காற்றில் இருக்கிற பிராண சக்தியை, நாம் சுவாசிக்கும்போது, நம்ம உடம்புல இருக்கிற அந்த 'அக்கு' புள்ளிகள், பிராணத்தை உடம்பு முழுக்கக் கடத்திக்கிட்டு ஓடற ஓடு பாதைகளா வேலை செய்கின்றன. அந்த ஓடுபாதைகள்ல ஏதாவது தடை, அடைப்புன்னு வந்துட்டா, உடம்புக்குச் சிக்கல் வருது.

இந்தச் சிக்கலை மருந்து மாத்திரைகளால குணப்படுத்தறது ரொம்பச் சிரமம்! மருந்து மாத்திரைகளோட வேலை பெரும்பாலும் நோய்க் கிருமிகளைக் கொல்றது தான்! டயாபடீஸ், இரத்த அழுத்தம்,

மூட்டு வலி... என எந்த நாள்பட்ட வியாதிகளுக்கும் இந்த அக்குபஞ்சர் முறையிலே நிரந்தரத் தீர்வு இருக்கு! திரும்பவும் அந்த நோய்களை வரவிடாம செய்ய முடியும்.

மனிதனோட காதில் மட்டுமே 136 அக்குப்புள்ளிகள் இருக்கின்றன. மனிதனுக்கு மட்டுமில்லாம விலங்குகள், தாவரங்கள் என எல்லாவற்றுக்கும் இந்த அக்குப்புள்ளிகள் இருக்கின்றன.

பலமான யானை ஒரு சின்ன அங்குசத்துக்குக் கட்டுப்படற ரகசியம் என்ன? யானையோட காதில் இருக்கிற அக்குப் புள்ளியை அங்குச ஊசியால குத்தினா, யானைக்குத் தலை கிறுகிறுக்கும்.

வாத்தியார் மாணவனைக் காதைப் பிடிச்சுத் திருகறதும், தலையில் குட்டுறதும் மாணவனோட ஞாபக சக்தியைத் தூண்டற அக்குப்புள்ளிகளை உசுப்புறதுக்குத்தான்! தோப்புக்கரணம் போடறது, உற்சாகப் படுத்தற சுரப்பிகளை வேலை செய்ய வைக்கிறதுக்காக. ஆனா, கால மாற்றத்துல ஆசிரியர் மாணவனைக் குட்டுறதும், காதைத் திருகறதும் வேற மாதிரி ஆயிடுச்சு!'' எனச் சிரிக்கிறார்.

''அக்குபஞ்சரில் ஸ்கேனிங், எக்ஸ்ரே, லேப்டெஸ்ட் என செலவு எதுவும் கிடையாது. கண், காது, நாக்கு, நாடித்துடிப்பு மூலமா நோயைத் துல்லியமா கண்டுபிடிச்சிடலாம். அதேபோல காஸ்ட்லியான மருந்து மாத்திரைகள் கிடையாது. பத்தியம், பக்கவிளைவுகள்னு எதுவுமே இல்லாம எப்பேற்பட்ட நோயையும் அக்கு பஞ்சர் முறையால குணப்படுத்திட முடியும்!

இப்போவெல்லாம் வியாதிகளுக்கு மட்டுமில்லாம முக வசீகரம், முடி வளர்தல் என அழகுக் கலைக்கும் அக்குபஞ்சரை மேலைநாடுகள்ல சிறப்பாச் செயல்படுத்தறாங்க! அக்கு பஞ்சர் அற்புதம் என்னன்னு நோய் குணமானவங்களுக்கு நல்லாவே தெரியும்!'' என்கிறார் டாக்டர் எம்.முத்துக்குமார்.

– எம்.ஆர்.ஆர்

**கொ**டைக்கானல் மலையில், காவல் துறையுடன் நடந்த துப்பாக்கிச் சண்டையில் இறந்துபோனான் நக்ஸலைட் நவீன் பிரஸாத். அவனது உடலைப் பெற்றுக் கொண்ட உறவினர்களும், நக்ஸலைட் ஆதரவாளர்களும் சுமார் ஆயிரம் பேர் 12 கி.மீ. தூரத்துக்கு ஊர்வலமாக எடுத்துச் சென்றிருக்கிறார்கள். அது மட்டுமல்லாமல், அடக்கம் செய்யப்பட்டபோது, காவல் துறையைச் சேர்ந்த ஒருவர்கூட மூக்கனூர் கிராமத்தில் அனுமதிக்கப்படவில்லை. இப்போது, தப்பித்துப் போன இரண்டு பெண்கள் உட்பட ஆறேழு நக்ஸலைட்டுகளை காவல் துறை கொடைக்கானல் மலையில் வலை வீசித் தேடி வருகிறது. ஆனும் அரசையும் குறை சொல்லாமல் 'தீவிர வாதத்தை பொதுவான தீங்காகக் கருதி, அதை ஒழிக்க அனைவரும் முன் வர வேண்டும்' என்று முதல்வர் சொல்லியிருக்கிறார்.

1980களில் காவல் துறைத் தலைவர் தேவாரம், நடத்திய தேடுதல் வேட்டைகளின் விளைவாக, பல நக்ஸலைட்டுகள் என்கவுன்டரில் வீழ்த்தப்பட்டனர். 'காவல் துறை அப்பாவிகளைச் சுட்டுத் தள்ளுகிறது' என்ற குற்றச்சாட்டு எழுந்தது. அந்த நடவடிக்கைகளுக்குப் பிறகு கொஞ்சம் டல்லாக இருந்தது. இந்த வருடத்திலிருந்து மீண்டும் துளிர்விடத் துவங்கியது.

2002ல் தர்மபுரி மாவட்டம் ஊத்தங்கரையில் முப்பதுக்கும் மேற்பட்ட நக்ஸலைட்டுகள் காவல் துறையின் அதிரடி வேட்டையில் கைது செய்யப்பட்டவர்கள்.

''நமது அரசாங்கம் நக்ஸலைட்டுகள் பிரச்னையை, சமூக, பொருளாதார, அரசியல் பிரச்னையாகப் பார்க்காமல் ஒரு சட்டம் ஒழுங்கு பிரச்னையாகப் பார்ப்பதால்தான், வளர்ந்து கொண்டிருக்கிறது'' என்கிறார், தமிழ்நாடு மக்கள் உரிமை கழக (பி.யு.சி.எல்.) தலைவரான டாக்டர் பி.சுரேஷ். ''உண்மையாகச் சொல்லப் போனால், பல தீவிர நக்ஸலைட்டுகள் போலீஸ் என்கவுன்டரில் போய்ச் சேர்ந்து விட்டார்கள். பலர் சிறையில் இருக்கிறார்கள். இப்போது மிச்சம் மீதி இருப்பவர்கள் மிகவும் சொற்பமே. ஆனால் அரசாங்கம், நமது கிராமங்களில் நிலவும் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டங்களை ஒழிக்க முழு மூச்சுடன் நடவடிக்கை எடுக்



கும் பட்சத்தில், இளைஞர்களுக்கு இந்த இயக்கத்தின் மீதுள்ள ஈடுபாடு குறைந்து விடும். காவல் துறை எடுக்கும் அடக்கு முறை நடவடிக்கைகள் இந்தப் பிரச்னைகளுக்குக் குறுகிய கால தீர்வாக இருக்குமேயின்றி நீண்டகால தீர்வாக இருக்காது. இப்போது கிராமங்களில் பொதுப் பிரச்னைகளில் ஆர்வம் காட்டி வரும் இளைஞர்களை நக்ஸலைட் என்று பொய் வழக்கு பதிவு செய்து உள்ளே தள்ளுகிறது போலீஸ். இது போன்ற செயல்கள் எதிர்விளைவை ஏற்படுத்தும்'' என்கிறார் சுரேஷ்.



* வழக்கறிஞர் சுரேஷ்

உறுப்பினர் பீட்டர் அல்போன்ஸ். பீகார், சட்டீஸ்கர், மற்றும் ஜார்கண்ட், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் நக்ஸலைட்டுகள் போட்டி அரசு நடத்துவது, மற்ற மாநில நக்ஸலைட்டுகளுக்கு ஒரு தார்மிக பலத்தைக் கொடுத்துள்ளது. இதற்கிடையில் நேபாளத்தில் தேர்தல் பாதைக்கு மாவோயிஸ்ட்டுகள் திரும்பியிருப்பது நம்பிக்கை நட்சத்திரமாகத் தெரிகிறது. 'தேர்தல் பாதை, திருடர் பாதை' என்று கோஷம் போடும் நமது நாட்டு நக்ஸலைட்டுகள், நேபாளம் காட்டிய திருப்பத்தால், மன மாற்றம் அடைந்து, ஜனநாயகப் பாதைக்

# மீண்டும் நக்ஸலைட்... தவிக்கும் போலீஸ்!



இந்தியாவில் உள்ள 542 மாவட்டங்களில், ஏழு மாநிலங்களில் இருக்கும் 220 மாவட்டங்களில் நக்ஸலைட்டுகள் தீவிரமாகச் செயல்படுவதாக மத்திய அரசு சொல்கிறது. ''முதலில் நமது ஜனநாயக அமைப்புகள் மீது நம்பிக்கையை வளர்க்கும் விதத்தில் அரசாங்கம் செயல்பட வேண்டும். நக்ஸலைட்டு பிரச்னை என்பது அரசின் பிரச்னையோ அல்லது காவல் துறையின் பிரச்னையோ அல்ல. இது ஒரு சமூகப் பிரச்னை. மூல காரணங்களுக்குத் தீர்வு இல்லாத பட்சத்தில் பிரச்னை வளரவே செய்யும்'' என்கிறார் காங்கிரஸ் சட்டமன்ற



குத் திரும்புவார்களா?

மாட்டார்கள் என்பது வழக்கறிஞரான அஜிதாவின் கருத்து. ''நேபாளத்தில் மாவோயிஸ்ட்டுகளின் தொடர் போராட்டம் காரணமாக மன்னராட்சி பணிந்து விட்டது. அதனால் அவர்கள் தேர்தலில் பங்கு கொண்டனர். ஆனால், இனிமேல் எப்படிப்பட்ட அரசியல் மாறுதல்களைக் செய்வார்கள் என்பதைப் பொறுத்துத்தான் பார்க்க வேண்டும். அதே சமயம் இந்திய நாட்டின் அரசியல் அமைப்பு முறையை நக்ஸலைட்டுகள் நம்பவில்லை'' என்கிறார்.

– ப்ரியன்

# ஆகாயத்தில்

மருதன்

ஒரு காஃபி கடையில் வைத்து, அந்த மீட்டிங்கை நடத்திக்கொண்டிருந்தார் பிப் கோபர்ன். உடன் அவரது நண்பர்கள் ஐவர். புதிதாகத் தொழில் ஒன்று தொடங்க உத்தேசித்திருந்தார் கோபர்ன். கன்சல்டன்ஸி விவகாரம். என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்பது பற்றிய தெளிவான செயல்திட்டம் கையில் இருந்தது. பிரச்னை அதுவல்ல. ஆஃபிஸ் எங்கே தொடங்குவது? அதற்குத் தேவையான பொருட்கள் எங்கே கிடைக்கும்?

காஃபி அருந்தியபடியே விவாதித்துக் கொண்டிருந்தார்கள். விளம்பரம் கொடுக்கலாம். இணையதளத்தை மேயலாம். தெரிந்தவர்களிடம் சொல்லி வைக்கலாம். இரண்டு காஃபி சேர்ந்தாற்போல் குடித்து முடித்ததும் பிப் கோபர்ன் மிகச் சாதாரணமாகக் கேட்டார், 'நிச்சயம் ஆஃபிஸ் வேண்டுமா?' 'புரியவில்லை' என்றார்கள் நண்பர்கள். 'எங்கே உட்கார்ந்து வேலை செய்வது? ஃபைல்களை எங்கே அடுக்கி வைப்பது? எங்கே உட்கார்ந்து பேசுவது?'

'இதுபோல் காஃபி ஷாப்பில் உட்கார்ந்து பேசலாமே' என்றார் பிப் கோபர்ன். யோசித்துப் பாருங்கள். ஆஃபிஸ் என்பது வெறும் கட்டடம் மாத்திரமல்ல. அவர்கள் யோசிக்க ஆரம்பித்தார்கள். அடுத்த ஒரு மணி நேரத்தில் புதிய பிசினஸ் மாடல் ஒன்று உருவானது. ஆளுக்கு ஒரு செல்ஃபோன் போதும், வேலையை ஆரம்பித்துவிடலாம். காஃபிக்குப் பில் கொடுத்துவிட்டுக் கலைந்து போனார்கள்.

அன்றைய இரவு நிம்மதியாக உறங்கினார் பிப் கோபர்ன். காலை ஐந்தரை மணிக்கு அலாரம் வைக்கவில்லை. சாவகாசமாகக் கண் விழித்தார். 'டாடி' என்று ஓடிவந்த குட்டிப் பாப்பாவைக் கட்டிப் பிடித்து விளையாடினார். 'என்னங்க ஆஃபிஸ் போகலையா?' என்று கேட்ட மனைவியைப் பார்த்துச் சிரித்தார். பத்து மணி வரை டீ.வி பார்த்தார். பிறகு சாண்ட்விச். பிறகு, காஃபி.

காஃபி? நேற்று காஃபி ஷாப்பில் பேசியது நினைவுக்கு வந்தது. மொபைலை எடுத்துக்கொண்டு பிரம்பு நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்தார். ஐவரில் மூவர் ஆன்லைனில் இருந்தனர். 'நான் என் மனைவியுடன் ஷாப்பிங் போகிறேன். இன்று சாயந்திரத்துக்குள் கஸ்டமரைப் பார்த்துவிடுகிறேன்' என்று தகவல் அனுப்பியிருந்தார்.

பிப் கோபர்னுக்கு அன்றைய தினம் ஒரே ஒரு அபாயின்ட்மென்ட்தான். மதியம் மூன்று மணிக்கு வெளியில் போக வேண்டும், கஸ்டமரைப் பார்க்க. அதுவரை ஃப்ரீ. என்ன செய்யலாம்?

வீடியோ கேம்ஸ். பிறகு, காலை நீட்டி உட்கார்ந்து நாவல் படித்தார். விறுவிறுப்பான துப்பறியும் கதை. மதியம் ஒரு மணிக்கு ஒரு மெஸேஜ். 'கஸ்டமரைப் பார்த்துவிட்டேன். டீல் ஓகே. அடுத்த வாரம் பேமன்ட் வந்துவிடும்.'

# ஆஃபிஸ்!

இன்னும் கொஞ்ச நேரம் தூங்கினார் பிப் கோபர்ன். பிறகு வேண்டிய மட்டும் அளவளாவிவிட்டு (மனைவியுடன்), வேண்டிய மட்டும் கொஞ்சிவிட்டு (குழந்தைகளை) கிளம்பினார். இரண்டு மணி நேரம் சந்திப்பு. முடிந்து மீண்டும் வீட்டுக்கு வந்துவிட்டார்.

தேவைப்படும்போது அனைவரும் சந்தித்துக்கொள்கிறார்கள்; காஃபி ஷாப்பில் அல்லது பூங்காவில். அல்லது சினிமா திரையரங்கில். நடந்துகொண்டே பேசுகிறார்கள். மாதம் ஒரு முறை குடும்பத்தினருடன் கூடி கொண்டாடுகிறார்கள். மாதா மாதம் ஒழுங்காக அவரவர் வங்கிக் கணக்கில் அவரவருக்கான சம்பளம் வந்து சேர்ந்துவிடுகிறது.

அவரவர் விருப்பத்துக்கு ஏற்றாற்போல் கஸ்டமர்களைப் பார்க்கலாம். மீட்டிங் நடத்தலாம். எந்தவிதமான கட்டுப்பாடுகளும் கிடையாது. அளவற்ற சுதந்திரம். அனைவருக்கும் இந்த மாடல் பிடித்துவிட்டது. சாவகாசமாகப் பணியாற்றுகிறார்கள். ஆனால், சாதுரியமாக.

கோபர்ன் வென்சர்ஸ் (Coburn Ventures) என்று அந்த நிறுவனம் அழைக்கப்படுகிறது. 'விருப்பப்பட்டவர்கள் எங்கள் மாடலைப் பயன்படுத்திப் பார்க்கலாம்' என்கிறார்கள். எல்லா ஆஃபிஸ் வேலைகளையுமே வீட்டில் இருந்தபடியே செய்துவிட முடியுமா? கோபர்ன் முன்வைக்கும் பளிச் விளக்கம் இது. நிச்சயம் முடியாது. ஆனால், எல்லா வேலைகளையும் ஆஃபிஸில் இருந்தபடிதான் பார்க்க முடியும் என்பதும் உண்மையல்ல.

உங்கள் ஆஃபிஸ் எங்கே இருக்கிறது என்று யாராவது இவர்களைக் கேட்டால், ஆகாயத்தை நோக்கிக் கையைக் காட்டுகிறார்கள்! ○



# புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி

என் மீது விருப்பம் ஏற்பட்டபோதே அதை அவர் வெளிப்படுத்தவில்லை. சில மாதங்கள் மறைத்தே வைத்திருந்தார். வெளியூர் நிகழ்ச்சியில் பாடச் சென்றிருந் தோம். அங்கு தனிமையில் இருக்கக் கிடைத்த ஒரு சந்தர்ப்பத்தைப் பயன்படுத் திக்கொண்டு, "'ஐ லவ் யூ' சொன்னால் என்ன செய்வீங்க?" என்றார். எனக்கு ஆத் திரம் ஆத்திரமா வந்துச்சு. அப்ப எனக்கு இவர்மேல கொஞ்சம்கூட ஆசையே இல்லை. 'இனிமேல் எந்தக் கச்சேரிக்கும் வர மாட்டேன்' எனச் சொல்லிவிட்டேன். பிறகு நிறைய சால்ஜாப்புச் சொல்லிச் சமா தானம் செய்தார்.

காதல் பாடல்களை இவரோடு ஜோடி யாகப் பாடுவதற்கு ஒரு ஆள் வேணும்னு நிறைய பேரிடம் கேட்டுப் பார்த்தார். யாருடைய குரலமைப்பும் இவருக்குப் பொருந்தி வரலை. "ஏன் என்னிடம் நீங்கள் கேட்கவில்லை?" என்றேன். "தமிழில் பேச்சு வழக்காற்றுச் சொற்கள் எல்லாம் உங்களுக்குச் சரியாக உச்சரிக்க வருமா?" என்று கேட்டார். எனக்குக் கோபம் வந்தது. "பாடலைச் சொல்லிக் கொடுங்கள். பாடிக் காட்டுகிறேன்" என்றேன். என்னுடைய குரல்தான் இவருக்கு ரொம்பவும் பொருந் தியிருந்தது.

'மாட்டு வண்டி பூட்டிக்கிட்டு
மாயவரம் போற மச்சான்!
மாயவரம் நானும் வாரேன்
போவோமா - மச்சான்
மாலை போட்ட ஆட்டம் கொஞ்சம்
பாப்போமா?
மாலை போட்ட ஆட்டம் பாக்க
மானே நீ கூட இருந்தா
மாமனுக்குக் கொண்டாட்டம்தான் கூட
வா! - இந்த
மாமன்கூட சேந்து பாட்டுப் பாட வா!'

அவர் படித்துக்கொண்டிருந்த காலத் திலேயே தனியாக நிறைய கச்சேரிகளுக்குச் சென்று பாடிச் சம்பாதித்துக்கொண்டிருந் தார். என்னுடைய குரல்வளம் அவருக்குப் பொருத்தமாக இருந்ததாலே கச்சேரிகளுக் கும் என்னைப் பாடச் சொன்னார். வீட்டில் அனுமதிக்க மாட்டார்கள் என்பதால் நான் மறுத்துவிட்டேன். உடனே இவர், இசைத் துறைத் தலைவராக இருந்த முனைவர் சீதா அவர்களிடம் முறையிட்டார். முனைவர் சீதா, "உனக்கு எந்த இடையூறும் நேராது. அதற்கு நான் உறுதியளிக்கிறேன். நீ பாடு" என்று நம்பிக்கையூட்டினார். வீட்டுக்குத் தெரியாமல் இவரோடு தொடர்ந்து கச்சேரி களில் பாடத் தொடங்கினேன். அந்தக் காதல் பாடல்கள் ரொம்பவே சுவைபட இருக்கும். இரண்டு வரிகள் அவர் பாட, அதுக்குப் பதில் போல நான் பாட, ஜனங்க உற்சாகமா கேட்டாங்க. நல்ல வரவேற்பு கிடைத்தது. நானும் இவரும் ஜோடியாகப் பாடுவதைச் சிலாகித்துப் பாராட்டுவாங்க. அப்பதான் இவருக்குள்ளே கொஞ்சம் கொஞ்சமா ஆசை முளைவிடத் தொடங்கி யிருக்குது.

இதற்கிடையில், நான் என் குடும்பத் தினரை இங்கேயே வரவழைத்துவிட்டேன்.

என் அம்மாவுக்கு இவருடைய குரலும் பாடல்களும் மிகவும் பிடிக்கும். 1991-ல் நானும் இவரும் பாடிய மேல்மருவத்தூர் அம்மன் பாடல்கள் கொண்ட ஒலிநாடாவை வெளியிட்டார்கள். எப்படியாவது திரைப் படப் பின்னணிப் பாடகியாக வந்துவிட வேண்டும் என்று என் திருமணத் துக்கு மறுப்பு தெரிவித்து வந்தேன். என்னை வைத்துக்கொண்டு என் தங்கைக்கு எப்படித் திருமணம் செய்வது என்று வீட்டில் கவலைப்பட்டார்கள். அத னால், என்னையும் செய்துகொள்ளுமாறு



# பழித்துக் காட்டிய பாடல்கள்!

வற்புறுத்தினார்கள். நான் சரி என்று சொன்னேன். எங்கே என்னை இழந்திடுவோமோ என்று இவருக்குப் பயம் வந்து விட்டது. விளையாட்டுக்குச் சொல்வது போல வெளிப்படுத்திவிட்டார்.

இவருக்கு என்மேல காதல் இருந்த மாதிரி, எனக்குக் காதல் இல்லை. ஏனென்றால், நான் பல்கலைக் கழகத்தில் படிக்கிற காலத்திலேயே எனக்கு நிறைய காதல் கடிதங்கள் வரும். 'ட்ரீம் கேர்ள் ஆஃப் யுனிவர்சிட்டி' என்று எனக்குப் பெயர்கூட வைத்திருந்தார்கள். அழகும் வசதியும் இருந்த பையன்களையேகூட ஒதுக்கிவிடுவேன். இயல்பில் நான் பயந்த சுபாவம் உடையவள். பரம சாது. ஆனால், எல்லோரிடமும் அன்பாகப் பழகுவேன். ஒரு பெண்ணுக்கு ஆணிடம் சில எதிர்பார்ப்புகள் இருக்கும். தோற்றம், வசதி எல்லாம் பார்ப்பாள். இவரைப் பிடிக்காமல் போனதற்கு அதுவும் காரணமாக இருக்கலாம். முகத்

தில் எண்ணெய் வழிய வழிய, படியத் தலை வாரியிருப்பார். பச்சைப் பசேல் என்றிருக்கும் கிராமத்து மண்வாசம் பிடித் திருந்தாலும், கிராமத்து வாழ்க்கையில் எனக்கு ஈர்ப்பில்லை.

பிறகு ஒவ்வொரு கச்சேரியிலும் எனக் காகவே பாடல்கள் எழுதுவார். பாட்டி லேயே மெஸேஜ் சொல்வதாக இருக்கும். காதல் தோல்விப் பாடல்களை எழுதி, உருகி உருகிப் பாடுவார். பாட்டு சொல்லிக் கொடுக்கும்போது ஜாடை மாடையா புரிய வைக்க முயற்சிப்பார். நான் தெரிந்துகொண் டதைப் போலக் காட்டிக்கொள்ள மாட் டேன். பிறகு குளிர் விட்டுப் போயிடும் என்று உணர்ந்திருந்தேன். அவரால என்னை மறக்க முடியாது என்ற ஒரு கட் டம் வந்தது. ''தூக்கிட்டுப் போய்க் கல் யாணம் செய்துகொள்வேன்'' என்றெல் லாம் மிரட்டினார். கச்சேரியில் பாடும் பாட்டுகூட, அவர் ஆசையைச் சொல்ல, நான் பழிப்பது போலவே இருக்கும்.

காசாங் காட்டுக் கொல்லையிலே
கதிரறுக்கப் போற புள்ளே
பேசாம போறதென்னடி வீராயி! - உன்
பேச்சுத் துணைக்கு நானும்
வாரேன் நில்லு தாயி!

வேஷம் காட்டும் வீரய்யா
ஆச வார்த்த ஏனய்யா?
பேசாம வேலையத்தான் பாரய்யா -
நான்
பேச்சி முத்து பேத்தி சொன்னாக்
கேளய்யா!

அப்படிப் போகும் அந்தக் கச்சேரி!

தொடர்ந்து அவர் காதலைச் சொல்லிய படியே இருக்க, நான் மறுத்துக்கொண்டே இருந்தேன். ஒருநாள் அவர் நண்பரிட மிருந்து தொலைபேசியில் ஒரு செய்தி வந்தது.

(அடுத்த வாரம்
புஷ்பவனம் குப்புசாமி)

● ஆர்.நாகராஜன், சென்னை - 117

? பஞ்சாங்கத்தின் மீது நம்பிக்கையில்லாத தமிழக முதல்வர், அதை ஆலயங்களில் படிக்கக் கூடாது என்று ஏன் தடை விதிக்கிறார்?

! ராமகோபாலன், சுறுசுறுப்பாக இயங்க வேண்டாமா? அதற்காகத்தான்! பா.ஜ.க., அ.தி.மு.க. கரங்கள் ஓங்கவும் தி.மு.க. மேன்மேலும் பலவீனமடையவும்தான் பலவாறாக மக்களின் மனங்களைப் புண்படுத்தி வருகிறார்!

● இரா.சக்கரபாணி, மதுரை - 7 ❒

? வியாபார சக்திகளை எந்தவிதக் கட்டுப்பாடும் இல்லாமல் சந்தையில் விளையாட விட்டுவிட்டு, விலைவாசி ஏற்றத்தைத் தடுக்க முற்படுவது என்பது தெரிந்தே நடக்கும் நாடகமா? நம்பி ஏமாந்த முட்டாள்தனமா?

! அமைச்சர்கள் - அரசியல்வாதிகள் தெரிந்தே நடத்தும் நாடகம்; வாக்காளர்கள் நம்பி ஏமாந்த பரிதாபம்.

● பா.அச்சுதன், வயலூர்

? சமீபத்தில் ரசித்துப் படித்த நாவல்?

! 'அழிதல் உலகு' என்ற நாவல். ஜோடி.குருஸ் எழுதியது. மீனவ மக்களின் நெடிய வாழ்க்கைப் போராட்டத்தை, அழகாகவும் நுட்பமாகவும் விவரிக்கும் அருமையான நாவல்.

● மீனா முருகேசன், தஞ்சாவூர்

? விசித்திரமான, உணர்வுபூர்வமான பிரியங்கா - நளினி சந்திப்பு பற்றி..?

! நளினி சார்பில், மீண்டும் வாதாட அவருடைய வழக்கறிஞருக்குக் கிடைத்த வாய்ப்பு. நீதிக்கும் நிர்வாகத்துக்கும் நேர்மைக்கும் ஏய்ப்பு. மிகமிகத் தவறான முன்னுதாரணம். ஸ்ரீபெரும்புதூரில் இறந்தவர்கள் எண்ணிக்கை பதினைந்து; ராஜீவ் மட்டுமே அல்ல.

● ரஞ்சனிப்ரியன், பள்ளிப்பாளையம்

? சென்னையில் ஒரே நாளில் 465 ரௌடிகள் கைது கின்னஸ் சாதனைதானே?

! வேதனையும்கூட. இத்தனை ரௌடிகள் உருவாக என்ன காரணம் என்பதை ஆராய்ந்து, அந்தப் பிரச்னையைக் கைது

✱ தவறான முன்னுதாரணம்

# ப்ரியங்கா-நளினி சந்திப்புப் பற்றி...?





## நீங்கள் கேட்டவை - தராசு



* புண்படுத்தும் போக்கு



* எதிர்மறை விளைவு!

செய்ய வேண்டும். இல்லையெனில், ரௌடிகள் உருவாகிக்கொண்டேதான் இருப்பார்கள்.

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

*? சிப்ஸ் சாப்பிடுவதைத் தவிர்க்குமாறு நடிகர்களுக்கு, மத்திய சுகாதார அமைச்சர் அன்புமணி வேண்டுகோள் விடுத்துள்ளது பற்றி..?*

! 'குப்பை உணவு' (junk food) என்பவற்றுக்கு எதிரான பிரசாரம் இன்று வலுத்து வருகிறது. அமைச்சர், 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்பதை மக்களுக்குச் சொல்லித் தந்தால் போதும். அவர் அறிவுரையும் அளவு மீறினால், எதிர்மறை விளைவையே உருவாக்கும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

*? ராகுல் காந்தி பிரதமர் ஆவதை கருணாநிதி வரவேற்கிறாரே?*

! வாரிசு அரசியலை வேறு எப்படி வளர்ப்பதாம்!

● கு.அருணாசலம், தென்காசி

*? என்.டி.ராமாராவ் போல் சிரஞ்சீவி ஆந்திர அரசைப் பிடிப்பாரா?*

! பிடிப்பாரா, தெரியாது! பிடித்தால், திரையுலக வாழ்க்கை அஸ்தமிக்கும் நேரம், அரசியலில் உதயம் காணும் போக்கானது சிரஞ்சீவித்துவம் பெறும் என்பது தெரியும்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

*? விளம்பரப் பலகைகள் இல்லாத சென்னை நகரம்?*

! விளம்பரங்கள் பல நீக்கப்பட்டுள்ளனவே தவிர, அவற்றின் இரும்புக் கட்டுமானங்கள் அப்படியே இருந்து நகரை விகாரப்படுத்தி வருகின்றன. விரைவில், இவற்றுக்கு லைசென்ஸ் பெற்று மறுபடி விளம்பரம் விரிக்கலாம் என்பது நோக்கமாக இருக்கக் கூடும்.

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய் விளக்கு

*? 1300 ரசிகர்களுடன் கண் தானம் செய்துள்ளாரே விக்ரம் - பாராட்டலாமே?*

! தாராளமாக 1300 x 2 தடவை 'ஓ' போடலாம்.

● லலிதா செல்லப்பா, சென்னை - 75

*? தலைமைச் செயலாளர் பேச்சை*

* விழி காட்டும் வழி

ஓட்டுக்கேட்ட நிகழ்வுக்கு, முதல்வர் விசாரணைக் கமிஷன் அமைத்தது கண் துடைப்புதானே?

! நக்ஸலைட்கள், பயங்கரவாதிகள் என்றாலும் சரி; அரசியல் ஆதாயத்துக்காக ஒட்டுக் கேட்பது பெரும் குற்றம். விசாரணை கமிஷன் அமைப்பதென்பது, பிரச்னையிலிருந்து தற்காலிகமாக விடுபடும் வழியாகவே இன்று ஆகிவிட்டது. கமிஷன் அமைத்தபோதே அதிகாரிகள் நிலையில் 'ஆய்வு'ம் நடத்தியது ஒட்டுக் கேட்டதைவிடப் பெரிய குற்றம்.



* திருப்புமுனை உதயம்?



* திறந்துவைத்த ஆணவம்!



* ஆட்சி ஆவல்!

● பழ.கவிதா சிவமணி, புன்செய்ப்புளியம்பட்டி ★

? பேராசை முடிகிற இடத்தில் சந்தோஷம் தொடங்குகிறது என்பது அரசியல்வாதிகளுக்குப் பொருந்தாததன் காரணம்...?

! பதவிக்காலம் முடிகிற இடத்தில் எலக்ஷன் செலவு காத்திருக்கிறது என்கிற காரணம்தான்!

● காசிதாசன், வந்தவாசி

? நேற்று கட்சி தொடங்கிய சரத்குமார், ''2011ல் என்னிடம் ஆட்சியைக் கொடுத்துப் பாருங்கள்...'' என்கிறாரே?

! நேற்று கட்சிக்குள் புகுந்த பிள்ளைகள், பிரதமர் பதவிக்கும் முதல்வர் பதவிக்கும் ஸீட் ரிஸர்வ் செய்யும்போது, இவர் ஏன் மக்களிடம் வோட்டுக்குக் கையேந்தக் கூடாது? கேட்டுப் பார்க்கிறார். கொடுப்பதும் கொடுக்காததும் நம் கையில்தானே!

● கே.வி.ராமன், சென்னை - 73

? வேறு சிலரது சிலைகளுடன் தமது சிலையையும் மாயாவதி திறந்து வைத்தாராமே?

! தமது அபரிமிதமான ஆணவத்தை மூடி மறைக்காமல் திறந்து வைத்திருக்கிறார்.

● கே.ஏ.காளிமுத்து, இராணிப்பேட்டை

? நக்ஸலைட்டுகள் ஆண்டுக்குப் பத்தாயிரம் கோடி செலவிடுவதாக உளவு அமைப்பு தெரிவித்திருப்பது அதிர்ச்சியளிக்கிறதே?

❒ ரூ.100/-
பரிசு பெறுபவர் :
இரா.சக்கரபாணி, மதுரை - 7

* ரூ.50/-
பரிசு பெறுபவர்:
பழ கவிதா சிவமணி, புன்செய்புளியம்பட்டி

! அடிப்பதோ கொள்ளை, செய்வதோ கொலை, வாழ்வதோ காட்டில், வாங்குவதோ லேட்டஸ்ட் தொழில்நுட்ப அறிவு ஆயுதங்கள்! இதில் அதிர்ச்சி என்ன... ஆச்சர்யம் என்ன? ●

# லேட் மேரேஜ்...

“ ‘காலத்தே பயிர் செய்!’னு சொல்வாங்க பெரியவங்க. ஆனா, இப்போ காலம் மாறிப் போச்சுன்னு சொல்லிக்கிட்டு, எல்லாத்தையும் பருவம் தவறியே செஞ்சு சிக்கல்ல மாட்டிக்கிறோம்!'' என்று புன்னகைக்கிற குழந்தையின்மை மற்றும் பாலியல் மருத்துவ நிபுணரும், ‘ஆகாஷ்’ குழந்தையின்மை மையத்தின் இயக்குனருமான டாக்டர் கே.எஸ். ஜெயராணி காமராஜ், குழந்தைப்பேறு குறித்த சில புதிர்களை விடுவிக்கிறார்.

''படிப்பு, நல்ல வருமானம், வாழ்க்கையில முன்னேறிய பின்புதான் திருமணம்னு, நம்ம உடம்போட நடைமுறைச் சிக்கல்களைப் புரிஞ்சுக்காம, ஐ.டி. துறை சார்ந்த பெண்கள் திருமணத்தை முப்பது வயசுக்கு மேலே தள்ளிப் போட்டுடறாங்க.

வேறு பல பெண்களுக்கோ ஜாதகம், தோஷம், வசதியின்மைன்னு திருமணம் தள்ளிப் போகுது. காரணம் எப்படிப் பட்டதா இருந்தாலும், இருபது வயசுல இருக்கும் எண்பது சதவிகிதம் கருத்தரிக்கும் வாய்ப்பு, முப்பது வயசுல பாதிக்குப் பாதியா குறைஞ்சிடும். முப்பத்தைந்து வயசுல இருபத்தைந்து சதவிகிதமாக மாறி, கருத்தரிக்கறதுக்கான வாய்ப்பே இல்லாம போயிடுதுங்கிற உண்மையைப் புரிஞ்சுக்கணும்!

ஆண்களைப் பொறுத்தவரை, உடம்புல பெருசா சிக்கல் ஏதும் இல்லேன்னாலும், முப்பத்தைந்து வயசுக்குமேலே இரத்த அழுத்தம், சர்க்கரை வியாதி சேர்ந்துட்டா, நிச்சயமா அது பிறக்கப் போற குழந்தையைப் பாதிக்கும். பெண்களுக்கு நிறைய சிக்கல்கள் இருக்கு. உடற்கூறு பிரச்னை, ஹார்மோன் சார்ந்த காரணிகள், நோய்கள்னு முப்பது வயசுக்கு மேற்பட்ட பெண்கள் கருத்தரிக்கறதுக்கு எதிர்கொள்ளும் பிரச்னைகள் ரொம்பவே அதிகம்!'' என்கிறார்.

''சில பெண்கள் முதல் குழந்தைக்கும் இரண்டாவது குழந்தைக்கும் அதிக



* டாக்டர் கே.எஸ். ஜெயராணி

காலம் எடுத்துக்கறாங்களே!'' என்ற போது, சீரியஸானார் டாக்டர்.

''நிச்சயமா, இது ஆரோக்கியமான போக்கு கிடையாது. பொதுவா, முதல் குழந்தைக்கும் இரண்டாவது குழந்தைக்கும் நான்கு வருஷங்களுக்குள்ளே வித்தியாசம் இருக்கறதுதான் நல்லது! அப்போதான் அந்தக் குழந்தைகள் சகோதர உணர்வும், தோழமையும் இருக்கிற நல்ல 'கம்பேனியன்'களா இருக்கும். வயசு வித்தியாசம் அதிகமா இருந்தா, அவர்களுக்குள்ளே மனரீதியான பிரச்னைகள் வர்றதுக்கான சூழல் அமைஞ்சிடும்!

இரண்டாவது குழந்தைக்கு அதிக காலம் எடுத்துக்கற தம்பதிகள், இன்னொரு விஷயத்தையும் கவனத்தில் வெச்சுக்கணும். முதல் குழந்தையோட



# லேடீஸ் ப்ராப்ளம்!

படிப்பு, வேலை, திருமணம்னு எல்லாத்தையும் ஒழுங்கா உரிய காலத்திலே செய்வாங்க. ஆனா, இரண்டாவது குழந்தை விஷயத்திலே பெரும்பாலும் பெற்றோர்கள் 'ரிடையர்டு' கண்டிஷனுக்குப் போயிடறாங்க. காலம் தள்ளி பெற்றுக்கொள்வதாலே வர்ற சிக்கல்தானே இது!

முன்பெல்லாம் பெண்கள் வயசுக்கு வந்தவுடனேயே திருமணம் செஞ்சு வெச்சுடுவாங்க. இப்பவும் அதுபோல செய்யணும்னு சொல்ல வரலை. ஆனா, அப்போ இருபத்தைந்து வயசுக்குள்ளேயே ஆரோக்கியமா ரெண்டு மூணு குழந்தைகளை, சுகப் பிரசவத்திலே பெத்துக்கிட்டுத் தாயும் சேயும் ஆரோக்கியமா இருந்தாங்க.

இப்போ என்ன நடக்குது... முப்பது வயசுக்கு மேலே திருமணம் செஞ்சுக்கிட்டு, கருத்தரிக்கிறதே சிரமமாகி, முதல் பிரசவமே சிசேரியனாகிடுது. இரண்டாவது குழந்தைக்கோ ஒரு பெரிய போராட்டமே நடத்த வேண்டியதா போயிடுது! மிகத் தாமதமாகி முப்பதஞ்சு வயசுக்கு மேல கருத்தரிக்கிறப்போ 'டவுன்ஸ் ஸிண்ட்ரோம்' போன்ற தீர்க்க முடியாத உடற்கூறு சிக்கல்களோட, குறையுள்ள குழந்தை பிறக்கற சாத்தியக்கூறு பல மடங்கு அதிகரிக்குது.

இப்போ இருக்கிற மருத்துவத் துறையின் அபார வளர்ச்சி, எல்லாப் பிரச்னைகளுக்கும் தீர்வு தருது. ஆனாலும், காலம் தவறிப் போய் செய்யற காரியங்களைப் பத்தி, முன்கூட்டியே யோசிக்கறதுதானே புத்திசாலித்தனம்! இல்லீங்களா?'' என்கிறார் டாக்டர் ஜெயராணி.

*(இன்றைய பெண்கள் இது குறித்து என்ன நினைக்கிறார்கள்...? ஃபாலோ- அப் விரைவில்!)*

- எம்.ஆர்.இராஜேந்திரன்



# தாகூரை மிஞ்சிய கோபம்!

''விடுதலைப் போராட்டத்தை, தாகூரைவிட பன்மடங்கு கோபத்துடன் எதிர்கொண்டவர் பாரதி'' என்றார் ஊர்வசி புட்டாலியா.

தமிழ் இலக்கிய உலகில் அழுத்தமான தடத்தைப் பதித்துள்ள 'காலச்சுவடு' இதழ், அண்மையில் 'ஒருநாள் பண்பாட்டு நிகழ்வு' என்ற பெயரில் புத்தக வெளியீடு, தமிழில் பெண் எழுத்து என்ற கலந்துரையாடல் மற்றும் சுந்தர ராமசாமி பற்றிய ஆவணப்பட வெளியீட்டை நடத்தியது.

காலச்சுவடின் இருநூற்று ஐம்பதாவது வெளியீடான 'பாரதி கருவூலம்' நூலை வெளியிட்டுப் பேசிய ஹிந்து நாளிதழின் ஆசிரியர் ராம், ''பாரதி, நாட்டு விடுதலை மட்டுமல்ல, சமூக விடுதலையும் தேவை என்பதை தமது எழுத்துகளில் அப்பட்டமாகச் சித்திரித்தவர். இன்னும் ஒரு நூற்றாண்டு கழித்து பாரதியைப் படித்தாலும், நீர்த்துப் போகாத எழுத்து அவருடையது. அவர் சுதேசமித்திரன், ஹிந்து நாளிதழ்களில் எழுதியவை வெறும் அரசியலல்ல; அவற்றில் இலக்கியம், வரலாறு அடங்கியுள்ளன. இந்தியா விடுதலை பெற்று இத்தனை ஆண்டுகளான பிறகும் அவரது எழுத்துகள் நமக்குத் தேவையாக உள்ளன'' என்றார்.

ஹிந்து நாளிதழில் வெளியான பாரதியுடைய எழுத்துகளின் தொகுப்பே இந்த 'பாரதி கருவூலம்'! தொகுத்தவர் : ஆ.இரா.வெங்கடாசலபதி. இத்துடன் 'காலச்சுவடு நேர்முகம்' என்ற நூலும் வெளியிடப்பட்டது. இதனை வெளியிட்ட பத்திரிகையாளர் மணா, ''பெரியாரை உண்மையான நோக்கில் விமர்சனம் செய்த கட்டுரைகள், காலச்சுவடில் இடம் பெற்று பெரும் அதிர்ச்சி அலைகளை உருவாக்கின'' என்றார்.



படங்கள் : புதுவை குமரன்

நாடகம், ஆவணப்படம், கலந்துரையாடல், வாசிப்பு என ஒருநாள் முழுவதும் நடந்தது இந்த இலக்கியத் திருவிழா!

– முத்தன்

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57"Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.

WORLD GOLD COUNCIL




# இந்த அட்சயதிரிதியை நன்னாளில் உங்கள் இல்லத்திற்கு தங்கம் எடுத்துச் செல்வதற்கு முன் அது பெருகுவதைக் காணுங்கள்.

தங்கத்தை முன்பதிவு செய்து இலவச தங்க நாணயங்களை உங்கள் இல்லத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்.






இந்த அட்சயதிரிதியை நன்னாளில் நீங்கள் வாங்க நினைத்த தங்க நகைகளை எங்கள் கடைகளில் எங்கு வேண்டுமானாலும் பில் மதிப்பில் 25% செலுத்தி முன்பதிவு செய்யுங்கள். தங்க நகைகளை அட்சய திரிதியை அன்று, முன்பதிவு செய்த தினத்தின் விலை மதிப்பிலேயே பெருவதோடு இலவச தங்க நாணயங்களையும் எடுத்துச் செல்லுங்கள்.

இச்சலுகை ஏப்ரல் 25 முதல் மே 7, 2008 வரை மட்டுமே

கோல்டுபிளஸ்
GOLDPLUS
from TATA
ஜுவல்லரி ஷோரூம்
உங்கள் வாக்குறுதிகள் நிறைவேறும்.

எங்கள் வைர நகை ரகங்களில் வியப்பூட்டும் சலுகைகளை கேட்டறியுங்கள்.

தமிழகத்தில் அதிகபட்ச கிளைகள் கொண்ட ஒரே ஜுவல்லரி ஷோரூம்

திண்டுக்கல்: Ph: 0451-2440066 / 2440077 • ஈரோடு: Ph: 0424 - 2250296 / 2262266 • கரூர்: Ph: 04324 - 26343
• நாகர்கோவில்: Ph: 04652 - 230043 / 451043 • புதுக்கோட்டை: Ph: 04322 - 224567 • தஞ்சாவூர்: Ph: 04362 - 2708[illegible]